உ

சிவ சிவ

# 'ஸ்ரீ குமரகுருபரர்'

## ஸ்ரீ ல ஸ்ரீ காசிவாசி முத்துக்குமாரசுவாமித் தம்பிரான் சுவாமிகள் அவர்கள்

அருளாணையின் வண்ணம்

வெளிவரும் சமய - இலக்கியத் திங்கள் இதழ்.



அட்டையில் :

திருச்செந்தூர் ஸ்ரீ செந்திலாண்டவர் திருவுருவம்

# ஸ்ரீ குமரகுருபரர்

பகுதி 4] கார்த்திகை [தொகுதி 2


## நாம மகிமை

ஸ்ரீ குமரகுருபர சுவாமிகள் தம் குருநாதரின் திருப்பெயரைச் சிந்திக்கிறார். மாசிலாமணி என்ற திருநாமத்தில் அநேக மகிமைகள் இருக்கின்றன என ஒரு வெண்பாவின் வழியாக அறிவிக்கிறார். அந்த வெண்பாவின் விளக்கத்தை அதிபர் ஸ்ரீலஸ்ரீ காசிவாசி எஜமான் சுவாமிகள் அவர்கள் அருள் பழுத்த கனிச்சுவையாக அருளியுள்ளார்கள்.

திருப்பனந்தாள் ஸ்ரீ காசிமடத்தில் நிகழ்ந்த முத்துக்குமார சுவாமி பிள்ளைத் தமிழ் பற்றிய கருத்தரங்கின் தலைமை ஏற்ற திரு. கம்பன் அடிப்பொடி அவர்கள் தம் தலைமையுரையைக் கட்டுரையாக அளித்துள்ளார்கள்.

சாஸ்திர விளக்கம் பகுதியில் பேராசிரியர் திரு.கு. சுந்தரமூர்த்தி அவர்கள் எழுதிவந்த 'நெஞ்சுவிடு தூது' நூல் விளக்கம் இந்த இதழுடன் நிறைவு பெறுகிறது. அது தனியே நூலாகவும் விற்பனைக்குத் தயாராகிறது.

கந்தர் கலிவெண்பா என்னும் ஸ்ரீ குமரகுருபர சுவாமிகள் அருளிய ஞானப்பனுவலைக் குட்டிக் கந்தபுராணம் என்பார்கள். கந்தபுராண வரலாற்றை அது சுருக்கிச் சொல்கிறது. கந்தர் அவதார வரலாற்றை அந்நூற் கருத்துக்களால் பின்னி அட்டைப்பட விளக்கமாகப் பேராசிரியர். திரு. தா. ம. வெள்ளைவாரணம் அவர்கள் எழுதியுள்ளார்கள்.

அஞ்சுவது யாதொன்று என்ற தலைப்பில் திரு. முருகு. சுவாமிநாதன் சிறு கட்டுரை வழங்கியுள்ளார்.

திரு. வன்மீகநாதன் அவர்கள் வழங்கும் லவட்ஸுவின் அறவுரைகளும், நூல் நிறை, பண்ணாராய்ச்சி சிறு கதை, நாடகம், திருக்கணித பஞ்சாங்கம், திருவிளையாடற் புராண உரைநடை ஆகியனவும் இந்தஇதழில் பிரசுரமாகியுள்ளன.

நி. ஆ—ர்.

---

விடையரங்கத்திற்கு வினா:

'உயிர்கள் பல. இவையனைத்தும் பக்குவமடைந்து இறைவனடியைச் சார்கின்றன' என்பது சைவ சித்தாந்த உண்மையாயின் ஒரு நாள் உயிர்களே இல்லாமற் போய்விடுமா?

— புலவர் மணி, வித்துவான்.
மு. இரத்தின தேசிகர்,
திருவாரூர்.

# திருக்கணித பஞ்சாங்கம்

## தி. கி. நாராயணசாமி, கடலூர். 1

துன்மதி ஞு கார்த்திகை மீ (1981 நவம்பர்—டிசம்பர்)

திதி, நட்சத்திரம் முடியும் நேரம் (ரயில்வே மணிக்கணக்கில்)

| தமிழ்வ | ஆங்கிலவ | கிழமை | திதி | நட்சத்திரம் | |
|---|---|---|---|---|---|
| 1 | (16—11—81) | திங்கள் | பஞ்சமி 11-27 | புனர்பூசம் | 16-47 |
| 2 | (17—11—81) | செவ்வாய் | சஷ்டி 9-41 | பூசம் | 15-53 |
| 3 | (18—11—81) | புதன் | சப்தமி 8-39 | ஆயில்யம் | 15-42 |
| 4 நவம்பர் | (19—11—81) | வியாழன் | அஷ்டமி 8-19 | மகம் | 16-12 |
| 5 | (20—11—81) | வெள்ளி | நவமி 8-41 | பூரம் | 17-21 |
| 6 | (21—11—81) | சனி | தசமி 9-[illegible]9 | உத்திரம் | 19-02 |
| 7 | (22—11—81) | ஞாயிறு | ஏகாதசி 11-07 | அஸ்தம் | 21-10 |
| 8 | (23—11—81) | திங்கள் | துவாதசி 12-59 | சித்திரை | 23-38 |
| 9 | (24—11—81) | செவ்வாய் | திரயோதசி 15-10 | சுவாதி | 26-23 |
| 10 | (25—11—81) | புதன் | சதுர்த்தசி 17-35 | விசாகம் | 29-18 |
| 11 | (26—11—81) | வியாழன் | ■அமாவாசை 20-08 | அனுஷம் | நாள் முழுவதும் |
| 12 | (27—11—81) | வெள்ளி | பிரதமை 22-47 | அனுஷம் | 8-20 |
| 13 | (28—11—81) | சனி | துவிதியை 25-24 | கேட்டை | 11-24 |
| 14 | (29—11—81) | ஞாயிறு | திருதியை 27-55 | மூலம் | 14-25 |
| 15 | (30—11—81 | திங்கள் | சதுர்த்தி 30-10 | பூராடம் | 17-15 |
| 16 | (1—12—81) | செவ்வாய் | பஞ்சமி நாள்முழுதும் | உத்திராடம் | 19-46 |
| 17 | (2—12—81) | புதன் | பஞ்சமி 8-00 | திருஓணம் | 21-50 |
| 18 டிசம்பர் | (3—12—81) | வியாழன் | சஷ்டி 9-17 | அவிட்டம் | 23-16 |
| 19 | (4—12—81) | வெள்ளி | சப்தமி 9-52 | சதயம் | 23-59 |
| 20 | (5—12—81) | சனி | அஷ்டமி 9-40 | பூரட்டாதி | 23-55 |
| 21 | (6—12—81) | ஞாயிறு | நவமி 8-39 | உத்திரட்டாதி | 23-04 |
| 22 | (7—12—81) | திங்கள் | தசமி 6-51<br>ஏகாதசி 28-21 | ரேவதி | 21-29 |
| 23 | (8—12—81) | செவ்வாய் | துவாதசி 25-16 | அசுவனி | 19-17 |
| 24 | (9—12—81) | புதன் | திரயோதசி 21-46 | பரணி | 16-37 |
| 25 | (10-12-81) | வியாழன் | சதுர்த்தசி 18-01 | ☀கிருத்திகை தீபம் | 13-40 |
| 26 | (11-12-81) | வெள்ளி | ○பௌர்ணமி 14-11 | ரோகணி | 10-35 |
| 27 | (12-12-81) | சனி | பிரதமை 10-29 | மிருகசீரிஷம் 7-36<br>திருஆதிரை 28-52 | |
| 28 | (13-12-81) | ஞாயிறு | துவிதியை 7-03<br>திருதியை 28-05 | புனர்பூசம் | 26-34 |
| 29 | (14-12-81) | திங்கள் | சதுர்த்தி 25-42 | பூசம் | 24-51 |
| 30 | (15-12-81) | செவ்வாய் | பஞ்சமி 24-01 | ஆயில்யம் | 23-50 |

பூங்கொன்றைக் கண்ணியான் பொன்மன் றிறைஞ்சிடுக
ஆங்கொன்றைக் கண்ணி யவர்.



# அருள் பழுத்த கனிச் சுவை

திருப்பனந்தாள், ஸ்ரீ காசிமடம் அதிபர்
**ஸ்ரீல ஸ்ரீ காசிவாசி**
**முத்துக்குமாரசுவாமித் தம்பிரான் சுவாமிகள் அவர்கள்**

ஸ்ரீ குமரகுருபர சுவாமிகள் அவர்கள் தம் குருநாதரின் திருநாமத்தைப் பற்றி ஓர் ஆய்வு செய்கிறார். மாசிலா மணி என்பது அவர் திருநாமம். மாசு என்பது குற்றம். மாசு இலா மணி என்னும் சொல்லுக்குக் குற்றம் இல்லாத இரத்தினம் என்பது பொருளாகும்.

மணிக்கு ஒளி உண்டு. இந்த மாசிலாமணிக்கும் ஒளி உண்டு. இந்த ஒளி, ஞான ஒளி.

மணியை அணியில் பதிப்பார்கள். இந்த மாசிலா மணியே ஓர் அணி. மாசிலாமணி, கண்ணிற்கு அணி. கண்ணிற்கு அணியாவது கண் பார்வையாகும். அடியவர்களின் கண்ணின் பார்வையாக இருந்து அவர்கட்கு யாண்டும் நற்காட்சியே வழங்குவதால் ஸ்ரீ மாசிலாமணி தேசிகர் கண்ணிற்கு அணியாகிறார்.

ஒரு மணியை ஓர் அணியில் பதித்தால் அந்த அணியிலேயே கிடக்க வேண்டியதுதான். எங்கள் மாசிலாமணியாகிய ஒரு மணியே கண்ணிற்கு மணியாகவும் இருக்கிருர். பண்ணிற்கு அணியாகவும் இருக்கிருர். பண் என்பது இராகம். இங்கு இசைப்பாடலைக் குறிக்கும். கண்ணிற்கு அணியாக விளங்கும் ஸ்ரீ மாசிலாமணி இசைப்பாடலுக்கு அலங்காரமாகவும் விளங்குகிருர்.

நாம் சொல்லும் மணிக்கும் குருதேவராகிய ஸ்ரீ மாசிலாமணிக்கும் சமத்துவம் இருப்பதாக முதலில் அறிவித்தார். அது ஒளி ஒற்றுமை. இரண்டாவதாக ஒற்றுமையில் வேற்றுமை இருப்பதாக அறிவித்தார். மணி ஒன்றுளே மட்டும் நின்றிலங்கும்; மாசிலாமணி பலவுள்ளும் இருந்து பாலிப்பது என்பது அது.

கண்ணிற்கு அணியாம் கதிர்மாசி லாமணியைப்
பண்ணிற்கு அணியாப் பகர்வரால்.

இந்தக் கருத்துக்கள் வரை தாம் சிந்தித்து உரைத்தவையல்ல மற்றவர்கள் சொல்லுவனவே என்று தெரிவிப்பதற்காகப் பகர்வரால் என்கிருர்.

மாசிலாமணி என்னும் குருநாமத்தைப் பற்றிய சிந்தனையை இத்துடன் நிறுத்தக்கூடாது. மேலும் மேலும் ஆழ்ந்து சிந்தித்தால் மணிக்கும் மாசிலாமணிக்கும் ஒரு பெருத்த வேறுபாடு இருப்பதை உணரலாம்.

'எண்ணுங்கால்'

மணி — அநித்யமானது
மாசிலாமணி — நித்யமானது

பஞ்சினுல் நூல் செய்து அதிலே மணியைக் கோப்பார்கள். பன் - பஞ்சு. பன்னூல் - பஞ்சுநூல். பல் + நூல்

என்பதும் பன்னூலென்று புணரும். தங்கக் கம்பியிலே கோப்பதும், வேறு வேறு உலோகக் கம்பிகளிலே கோப்பதும் இந்தப் புணர்ப்பினுல் அடங்கும்.

'பன்னூலில் கோக்கப் படுமணி'

'கோக்கப்படும், மணி என்று படிக்க வேண்டும் 'பன்னூலில் கோக்கப் படுமணி, என்று சீரிலக்கண முறையில் ஸ்ரீ சுவாமிகள் பிரித்து அமைத்துள்ளார்கள். அதிலேயும் ஒரு தொனிப் பொருள் அமைத்துள்ளார். படுதல், அழிதல். பன்னூலில் கோக்கப்படும். 'அதாவது பயன்படுத்தப் பயன்படுத்த அழிந்துபோகும் என்று உலகில் நாம் கூறும் மணியின் அநித்யத்தைத் தொனியில் வைத்துக் கூறியுள்ளார். தொனிப் பொருள் என்பது உச்சரிப்பால் பெறப்படும் பொருள்.

அநித்யமற்ற நூலில் (புத்தகத்தில்) கோக்கப்படும் மணியே ஸ்ரீ மாசிலாமணி. பண்டார மும்மணிக்கோவை என்னும் இந்த ஞான இலக்கியத்துள் கோக்கப் பெற்றுள்ள மணி, ஸ்ரீ மாசிலாமணியே அன்றே? பாடலின் முழுவடிவம் வருமாறு:-

கண்ணிற்கு அணியாம் கதிர்மாசி லாமணியைப்
பண்ணிற்கு அணியாப் பகர்வரால் – எண்ணுங்கால்
பன்னூலில் கோக்கப் படுமணி அன்று; இம்மணி மற்று
இந்நூலில் கோக்குமணி என்று.

*[கதிர் - ஒளி; பண் - இசைப் பாடல்; பகர்வர் - கூறுவர்; ஆல் - அசை; பன் - பஞ்சு]*

பண்டார மும்மணிக்கோவையாகிய இந்நூலில் இம்மணி கோக்கப் பெறுகிறது என்பதை அடிகள் தாமே

அருளுவது ஏலாதாகையினல் 'இந்நூலில் கோக்குமணி என்று பகர்வரால்' எனக்கொண்டுகூட்டி வினைமுடிவு செய்ய அமைத்தார்கள்.'

குருநாதரின் திருப்பெயரின் பேரில் உள்ள காதலின் காரணமாக எழுந்த உணர்ச்சி வெண்பா என்று இதனைச் சொல்ல வேண்டும். அந்தப் பேரன்பின் காரணமாகவே அந்த நாமமகிமையைப் பல்வேறு வழிகளில் சிந்தித்து நாமுணர — நாமுய்ய - இவ்வெண்பாவாக அருளியுள் ளார்கள்.

— சிவ சிவ



# ஸ்ரீ செந்திலாண்டவர்

தா. ம. வெள்ளைவாரணம்

திருச்சீரலைவாய் என வழங்கும் திருச்செந்தூரில் கோயில் கொண்டு எழுந்தருளியிருக்கும் பெருமானே ஸ்ரீ செந்திலாண்டவர். இப்பெருமான் பூங்கயிலை வெற்பில் எழுந்தருளியுள்ள முக்கட் பரஞ்சோதியின் செந்தழற் கண்களிலிருந்து தீப்பொறிகளாய்த் தோன்றினார். சரவணப் பொய்கையில் ஆறு குழந்தைகளின் வடிவாகி அறுமீன் முலையுண்டு அழுது விளையாடினார். உமாதேவியாரால் எடுத்தணைக்கப் பெற்று மெய் ஆறும் ஒன்றாக மேவினார்.

விண்ணோர் முறைக்கு இரங்கிச் சூரனைச் சம்ஹாரம் செய்யும் பொருட்டுப் படையுடன் புறப்பட்டார். வழியிடையே தாரகனையும் கிரவுஞ்சத்தையும் தூளாக்கினார். பின்பு சீரலைவாய் என்னும் திருச்செந்தூரில் கருணை வெள்ளமென எழுந்தருளினார். அங்கிருந்தபடியே ''சூரனைச் சோதித்துவருக'' என்று வீரவாகு தேவரைத் தூது விட்டார். சூரபன்மன் தேவர்களைச் சிறைவீடு செய்ய மறுத்தான். எனவே, செந்திலாண்டவர் சூரனோடு போரிட்டுத் தானவர்கள் நாற்படையும் சங்கரித்தார். சிங்கமுகனை வென்று வாகை முடித்தார். சூரனின் அங்கத்தை இருகூறாக ஆக்கினார். ஒரு கூறு மயிலாகவும் மறு கூறு சேவலாகவும் எதிர்வர அவற்றுள் மயிலை வாகனமாகவும், சேவலைக் கொடியாகவும் அமைத்துக் கொண்டார். மூவர் குறை முடித்துத் தேவர்களை விண்ணில் குடியேற்றினார். மீண்டும் செந்திலம் பதிக்கு வந்து எழுந்தருளினார். வழிபடும் அடியார்க்கு வரம் தரும் பொருட்டு ஸ்ரீ செந்திலாண்டவர் எஞ்ஞான்றும் நிலையாய் இப்பதியில் எழுந்தருளி இருக்கிறார். இப்பெருமான் மூலத்தானத்தில் ஒரு திருமுகமும் நான்கு திருக்கரமும் கொண்டவராயும், உற்சவ மூர்த்தியாம் சண்முக நயினார் வடிவில் ஆறுமுகமும் பன்னிரண்டு தடந்தோளும் கொண்டவராயும் நவையறு காட்சி நல்குகிறார்.

இப்பெருமானின் ஆறு முகங்களில் முதலாவது முகம், வெஞ் சூரனைத் தடிந்து தெவ்வருயிர்சிந்துவிக்கிறது. இரண்டாவது முகம், எவ்வுயிர்க்கும் ஊழ்வினையை மாற்றி உலவாத பேரின்பம் செய்கிறது. மூன்ருவது முகம், பழ மறைகளையும் ஆகமங்களையும் அருளுகிறது. நான்காவது முகம், பாச இருள் துரந்து பல்கதிரில் சோதி விடுகிறது. ஐந்தாவது முகம், வள்ளிக்கும் தெய்வயானைக்கும் மோகம் அளிக் கிறது. ஆருவது முகம், தன் அடிசேர்ந்து வழிபடுவார்க்கு வரம் பலவும் தர்தருள்கிறது.

கரங்களில் முதலாவது கரம், ஆரமுதத்தைத் தேவர்க்கு உதவு கிறது. இரண்டாவது கரம், சூர் மகளிர் மேவ அணைத்துக்கொள் கிறது. மூன்ருவது கரம், மாரி பொழிவிக்கிறது. நான்காவது கரம், பூந்தொடையல் சேர அணிந்திருக்கிறது. ஐந்தாவது கரம், மார்பகத் தில் அபயகரமாக வைக்கப்பட்டிருக்கிறது. ஆருவது கரம், இடப் புறத்து மருங்கில் வைக்கப்பட்டிருக்கிறது. ஏழாவது கரம், தொடை யில் ஊன்றியிருக்கிறது. எட்டாவது கரம், சிறு தொடி அணிந் திருக்கிறது. ஒன்பதாவது கரம், மணியைப் பிடித்திருக்கிறது. பத்தாவது கரம், அங்குசம் ஏந்தி இருக்கிறது. பதினேராவது கரம், கேடகம் சுழற்றுகிறது. பன்னிரண்டாவது கரம் கதிர் வாள் விதிர்க் கிறது.

இத்தகைய தெய்வீக வடிவத்தை உளந்தனில் கண்டு ஆதரிப் போர்க்கு ஆருயிராய் ஸ்ரீ செந்திலாண்டவர் அவ் அன்பர்களின் அகத் தாமரையின் மீது தெய்வ விளக்கொளியாய்த் திகழ்கின்ருர்.

இப்பெருமானின் திருவருள ல் ஸ்ரீ குமரகுருபர சுவாமிகள் பேசாமை நீங்கப் பெற்றுக் கந்தர் கலி வெண்பாவைப் பாடியருளி ஞர் பகழிக் கூத்தர் என்னும் புலவர் இப்பெருமானின் திருவருளால் திருச்செந்தூர் முருகன் பிள்ளைத் தமிழ் பாடி வயிற்று வலி நீங்கினர். இங்ஙனம் இப்பெருமானை வழிபட்டுப் பேறு பெற்ருேர் பலராவர்.



# 47. அறிவைப் பெறுவதில் நாட்டம்

தமிழாக்கம் - கோ. வன்மீகநாதன்

தன் வீட்டு வாசற்படியைத் தாண்டி வெளிச் செல்லாமலே
உலகத்தில் நடப்பதை ஒருவர் அறியலாம்,
தன் வீட்டின் பலகணி வழி வெளியே பார்க்காமல்
முத்தியளிக்கும் பிரப்மத்தைக் காணலாம்.
எவ்வளவுக்கெவ்வளவு ஒருவன் அறிவை நாடுகிறுனே
அத்துணைக்குக் குறைவாக அவன் அறிகின்றுன்.
ஆகையால் மெய்ஞ்ஞானி ஓடித்திரியாமல் அறிகின்றுன்,
பார்க்காமல் புரிந்து கொள்கிறுன்,
யாதும் செய்யாமல் காரியத்தைச் சாதிக்கின்றுன்[1]

---

1. ஒப்பிடுக:

சும்மா இருத்தல் சுகம் - தாயுமானவர்:
சும்மா இரு சொல்லற - அருணகிரியார்.
எம்மா ருயிராம் எழில்மாசி லாமணியை
அம்மா பெறுதல் அரிதன்றே - சும்மா
இருந்தாரே பெற்றுர்; மற் றெவ்வுலகில் யாரே
வருந்தாது பெற்றுர் மணி.

— குமரகுருபரர், பண்டார மும்மணிக்கோவை- 9

செய்தற் கரியசெயல் பலவும் செய்து சிலர்
எய்தற் கரியதனை எய்தினர்கள் – ஐயோநாம்
செய்யாமை செய்து செயலறுக்க லாயிருக்கச்
செய்யாமை செய்யாத வாறு.

— திருக்களிற்றுப்படியார். 61

## 48. செயற்படாமையால் உலகை வெல்லுதல்

அறிவை வளர்க்க முயலும் மாணவன்
நாள்தோறும் கற்பதில் குறியாயிருக்கிறான்.
டௌவைப் பின்பற்றும் மாணவன் நாள்தோறும்
இழப்பதில் குறியாயிருக்கிறான்.
தொடர்ந்து இழப்பதால் யாதும் செய்யாத நிலையை
அடைகிறோம் (போட்டது போட்டபடி கிடக்கட்டும்,
எதையும் கிளறிவிட்டுவிடாதே என்றறிலை)
யாதும் செய்யாதிருத்தலால் எல்லாம் செய்து
முடிக்கப்பட்டு விடுகிறது.
எவனொருவன் உலகை வெல்கிறானோ அவன் பெரும்பாலும்
யாதும் செய்யாமலிருந்ததாலேதான் அப்படி
வெல்கின்றான்.
எதையாவது ஒன்றைச் செய்ய ஒருவன் கட்டாயப் படுத்தப்
பட்டால், அதற்குமுன்பே உலகம் அவனால் வெல்வதற்கு
அப்பாலாகி விடுகிறது.

## 49. மக்களின் உள்ளம்

மெய்ஞ்ஞானிக்கு யாதும் முடிந்த முடிவான கருத்துக்களும்
உணர்ச்சிகளும் இல்லை,
மக்களின் கருத்துக்களையும் உணர்ச்சிகளையும்தான்
தன்னுடையதாகக் கருதுகிறான்.
நல்லவர்களை நான் நல்லவர்களாகச் சாற்றுகின்றேன்;
கெட்டவர்களையும் நல்லவர்களாகச் சாற்றுகின்றேன்
இதுதான் சிறந்த பண்பாட்டின் நயம்.
யோக்கியர்களை நான் நம்புகிறேன்;
அயோக்கியர்களையும் நான் நம்புகிறேன்.
இதுதான் சிறந்த பண்பாட்டின் திடநம்பிக்கை.
மெய்ஞ்ஞானி உலகில் அமைதியாக வாழ்கிறான், எல்லோரோடும்
ஒற்றுமையுடன் வாழ்கிறான்;
உலக மக்கள் உள்ளத் தோழமை நிலைக்குக் கொண்டு வரப்
படுகிறார்கள்.
மெய்ஞ்ஞானி அவர்கள் அனைவரையும் தன் குழந்தைகளாகப்
பாவிக்கிறான்.

# நூல் நிறை



## புதிய இந்தியாவைப் படைப்போம்

[அருளியவர்: சுவாமி விவேகானந்தர்; தொகுப்பின் மொழி பெயர்ப்பு: சுவாமி கமலாத்மானந்தர்;வெளியீடும் கிடைக்குமிடமும்: ஸ்ரீ ராமகிருஷ்ணமடம், 16 ராமகிருஷ்ணமடம் ரோடு, மயிலாப்பூர், சென்னை 600 004; பக்கம் 8+100; விலை ரூ. 1.]

சுவாமி விவேகானந்தர் இந்தியனை, இந்துவை உலக அரங்கில் நிமிரச்செய்தவர். அவர்தம் அருளுரைகளில் எழுத்துக்களில் ஒளிமிகுந்த பாரதம் உருவாகச் சொன்ன வழிகள் பல. அவற்றின் தொகுப்பு கடந்த ஆண்டு வெளியாயிற்று. அதன் தமிழாக்கமே இந்நூல்; ஐந்து அதியற்புதமான தொகுப்புக் கட்டுரைகள் இந்நூலில் உள்ளன.

'நமது தாய் நாட்டிற்கு இந்த உலகம் பட்டிருக்கும் கடன் மகத்தானதாகும். சாதுவான இந்துவுக்கு உலகம் கடமைப்பட்டிருப் பதைப் போன்று, பூமியில் வேறெந்த இனத்துக்கும் உலகம் இவ்வளவு பெரிய அளவிலே கடன்பட்டிருக்கவில்லை' (பக்கம் 15. இந்தியாகுடிசை களில் வாழ்கிறது என்ற முதற்கட்டுரை)

நாம் கடன் வாங்கியவர்கள் என்று தவருக நினைத்து இனியும் குனியத் தேவையில்லை என்று சுவாமிகள் நம்மை ஆசுவாசப் படுத்து கிருர்.

மாளிகைகளையே நினைக்கிருேம்; குடிசெய் மக்கள் வாழும் குடி சைகளை எப்படியெப்படியெல்லாம் நினைத்து உயர்த்த வேண்டும் என இந்நூல் வற்புறுத்துகிறது.

உள்ளத்தைத் தொடும் பொன் மொழிக் குவியல்கள்!

'இந்த உலகத்தில்மகத்தான எல்லாக் காரியங்களையும் ஏழைகள் தாம் சாதித்'திருக்கிருர்கள்' (முன்னேறிச் செல்லுங்கள் கட்டுரை பக்கம் 81)

'தனிமனிதர்களின் சக்திகளை ஒன்று சேர்க்காத வரையில்எந்தப் பெரிய காரியமும் செய்ய இயலாது' (பக்கம் 89)

இதுபோன்ற உலக வரலாற்றின் பிழிவுகளான தொடர்கள் ஏராளம்.

முன்னேற நினைக்கும் இந்தியனுக்கு இந்த நூல் ஓர் அட்டவணை. எல்லா இந்துவும் கட்டாயம் இந்த நூலைப் படித்துப் புத்துணர்ச்சி பெற்ருக வேண்டும்.

ம. வே. ப.

## தோத்திரப் பாமாலை

[இயற்றியவர்கள்:- 1. சோழவந்தான் அரசஞ் சண்முகனுர்; 2. ஸ்ரீ-ல-ஸ்ரீ சிவப்பிரகாச சுவாமிகள்; வெளியீடும் கிடைக்குமிடமும்: ஸ்ரீ-ல-ஸ்ரீ சிவப்பிரகாச சுவாமிகள் மடாலயம், கிண்ணி மடம் பேட்டை, சோழவந்தான்.—612 120; பக்கம் (12+4+14) விலை: 0—50 காசு.]

தமிழிலக்கண, இலக்கிய ஆராய்ச்சி அறிஞர் சோழ வந்தான் அரசஞ் சண்முகனுரின் அரிய படைப்புகளை வெளியிடும் முயற்சியில் முதலாக மலர்ந்தது இந்நூல்.

இந்நூலுள் அரசஞ் சண்முகனுர் இயற்றிய சிதம்பர விநாயகர் மாலை, ஸ்ரீ மீனுட்சியம்மை திருவடிப் பத்து என்னும் நூல்களும், ஸ்ரீலஸ்ரீ சிவப்பிரகாச சுவாமிகள் அருளிய மந்தார விநாயகர் பதிகம், ஸ்ரீ அருளானந்த சுவாமிகள் ஆகிய பகுதிகளும் இடம்பெறுகின்றன.

குருவினையும், குருவடிவாகிக் குவலயந் தன்னில் மருள் நீக்கி அருள் பெருக்கும் இறைவனையும் நெஞ்சுருகப் பாடி அருள் வேட்டு நிற்கும் நிலையில் அமைந்துள்ள பாடல்கள் இனிய ஓசையும், ஆழ்ந்த பொருள் நலமும், உவமைச் சிறப்பும், கற்பனை நயமும் கலந்து கற்பார் மனத்தைக் கனிவுறச் செய்வனவாக உள்ளன. சத்தான தத்துவக் கருத்துக்களும் ஒத்தமைந்து நூலின் சிறப்பை மிகுவிக்கின்றன.

இது, சிறந்த தோத்திர நூல் என்பது துணிபு.

## மாலை மாற்று மாலை

[இயற்றியவர்:- சோழவந்தான் ஸ்ரீ அரசஞ் சண்முகனுர், வெளியீடும் கிடைக்குமிடமும்: ஸ்ரீ-ல-ஸ்ரீ சிவப்பிரகாச சுவாமிகள் திருமடம் (கிண்ணி மடம்) பேட்டை, சோழவந்தான் - 624 214; பக்கம்: (4+8+12+10+38) விலை: 2—00).

சோழவந்தான் அரசஞ் சண்முகனுரின் நூல்களை வெளியிடும் பணியில் இரண்டாவதாக வெளிவந்துள்ளது இந்நூல்.

''ஆசுமுதல் நாற்கவியும்'' - என ஸ்ரீ குமரகுருபர சுவாமிகள் அருளிய நாற்கவிகளில், சித்திர கவியின் வகைகளுள் ஒன்றுகிய 'மாலை மாற்று' எனும் பாவகையால் இந்நூல் அமைந்துள்ளது.

தமிழ் இலக்கணம், திருக்குறள், சங்கவிலக்கியங்கள், தருக்கம், சோதிடம்,சித்தாந்தம் ஆகியவற்றுள் ஆழ்ந்த ஈடுபாடும் அறிவு நலமும் சான்ற சண்முகனுர் ஆராய்ச்சிகளின் வாயிலாக அரிய உண்மைகளை வெளிப்படுத்தினர். திருக்குறளிலும், தொல்காப்பியத்திலும் தம் கருத்தை ஒருமித்து ஈடுறுத்தி அவற்றைத் தம் ஆராய்ச்சிக் களங் களாகக் கொண்டு திறனுய்வுக் கலைஞராக விளங்கிய பல்துறைப் புலமை மிக்க சண்முகனுரின் இந்நூல் அரியதொரு படைப்பு என்பது துணிபு.

இலக்கண மரபு நெறிக்குட்படாத புத்திய கவிதைகள் பெருகி வரும் இந்நாளில், முற்றிலும் இலக்கண நெறியுட்பட்டு, அருங் கருத்துக்களைத் தன்னகத்தே கொண்டு, சித்திர கவியில் அமைந்த இந்நூலைக் காண்கையில் பழமை போற்றும் பாவலர் உளம் இறும்பூ தெய்வது இயல்பு.

'மாலை மாற்று' எனும் பாவமைப்பில், இலக்கண நூல்களில் உதாரணச் செய்யுட்களாக ஒன்றிரண்டு பால்களே காட்டப்பட்டன; 'மாலை மாற்று மாலை' என ஒரு நூலையே அவ்வமைப்பில் பாடிய பெருமை சண்முகனுரையே சாரும்.

பொருளாழம் மிக்க செய்யுட்களின் நயத்தையும், இலக்கண, இலக்கியக் கூறுகளையும் நுண்ணிதின் ஆய்ந்து கற்பார்க்கு எளிமை யாக அமையும் வகையில் மு. ரா. கந்தசாமிக் கவிராயர் அவர்கள் உரை வகுத்துள்ளார்கள்.

தமிழ்நூற் பயில்வுடையார்க்குச் சிறந்ததொரு விருந்தாகஇந்நூல் அமைந்துள்ளது.

— புலவர். முருகு. சுவாமிநாதன். பி.லிட்.. (எம்.ஏ)



# திருவருட்பா

திருவருட் பிரகாச வள்ளலாரின் திருவருட்பா 1—5 திருமுறைகள் ஒரு தொகுப்பாகவும், 6 ஆம் திருமுறை ஒரு தொகுப்பாகவும், உரைநடைகள் ஒரு தொகுப்பாகவும் வெளிவந்துள்ளது. இராமலிங்கர் இறைபணி மன்ற வெளியீடு. தொழிலதிபர் திரு. நா. மகாலிங்கம் அவர்களின் அரிய பெரிய முயற்சியின் நல் விளைவு. வியத்தற்குரிய வெற்றிப் பதிப்பு. ஒவ்வொரு தொகுப்பின் விலையும் ரூ. 50 ஆகும்,

கிடைக்குமிடம்:

இராமலிங்கர் பணிமன்றம்,
31, போயசு தோட்டம்,
சென்னை—600 086.

****************************

# அஞ்சுவது யாதொன்று?

****************************

புலவர். முருகு. சுவாமிநாதன் பி. லிட். (எம். ஏ.)

சுவைக்கப்படும் பொருளும் சுவைக்கும் பொறியும் கூடுகையில் சுவையுணர்வு தெரிகிறது. சுவைகளை ரசம், மெய்ப்பாடு, விறல், சத்துவம் என்னும் பெயர்கள் கொண்டும் தமிழுலகம் வழங்கும். தொல்காப்பியர்,

நகையே அழுகை இளிவரல் மருட்கை
அச்சம் பெருமிதம் வெகுளி உவகையென்று
அப்பால் எட்டே மெய்ப்பா டென்ப.

என எண்பான் சுவைகளை மொழிவர்; எண் சுவைகளும் அமைந்து கற்பார்க்குக் களியினை ஊட்டும் பாடல்களைச் சங்க இலக்கியத்தும், பிற்கால இலக்கியத்தும் பரக்கக் காணலாம்.

எண்சுவையுள் தொல்காப்பியரால் ஐந்தாவதாக வைத்து எண்ணப் பெற்ற அச்சச் சுவையானது பிறக்கும் நிலைக்களங்களாக நான்கினை மொழிவர்; அவை: அணங்கு, விலங்கு, கள்வர், இறை என்பன. அணங்கு என்பது பேயும், பூதமும் முதலாயின; சிங்கம், புலி முதலானவை விலங்குகள். தீத்தொழில் புரிகின்றார் கள்வராவார்: கோத்தொழில் புரிகின்றார் இறை எனப்படுவார்; என்று பேராசிரியர் உரைவகுப்பார்; இந்த அமைப்புக்களில் அடங்கும் பொருள்களையும் அவற்றின் செய்கைகளையும் காண்கையில் அச்சம் வருவது வெளிப்படை.

'பாம்பென்றால் படையும் நடுங்கும்' என்பது முதுமொழி. பாம்பைக் கண்டு அஞ்சாதவர்களே இருக்கமாட்டார்கள்; அமானுஷ்யமான சக்திகள் என்று கருதப்படும் பேய், பூதங்களைப் பற்றி -கண்டபின் அஞ்சுதலேயன்றிக் காணுவதற்கு முன்பே பிறர்சொல்லக் கேட்டும், எழுதப் படித்தும் அஞ்சுவது காணலாம். மழைபெய்யும் நேரத்தில் தோன்றுகின்ற மின்னலையும் அதைத்தொடர்ந்து உண்டாகின்ற இடியையும் கண்டும் கேட்டும் அஞ்சுவது மானிடர் இயல்பு.

இவ்வாறு உலகிலுள்ளவர் கண்டு, கேட்டு, அறிந்து அஞ்சத்தக்கன இருக்கையில் இவற்றுக்கெல்லாம் கூட அஞ்சாது இருப்போம்; ஏனெனில் இவற்றால் துன்பம் நேரின் அத்துன்பங்கள் நீக்கக்கூடியன; அவை எதிரே தோன்றி இன்னல் விளைவிக்கும்; மறைந்து இருந்து துன்பம் உண்டாக்காது; ஆனால் இவற்றின் கொடிய உருவமாகத் திகழ்ந்து சமயங்கள் ஆனவற்றின் நல்லாறு தெரிந்துணந்தவர்கள் போன்று-அடியார்போல் நடித்து –அக்கொள்கைகளில் நம்பிக்கையும் கடைப்பிடியும் இல்லாதவர்களாய்ப் பிறதெய்வங்களை உண்டென்று கருதியும், அவற்றை ''மூவரென்றே எம்பிரானொடும் எண்ணி''யும் கொள்கைக் குழப்பம் உடையவராய் இரண்டுக்கும் இடையில் நிற்போரைக் கண்டால் அச்சம் உண்டாகிறது; அவர்கள் அஞ்சத்தக்கவர்கள் என்றுரைப்பார் மணிவாசகர்.

அவர் உலகியலில் அச்சத்தைத் தோற்றுவிக்கக் கூடிய பொருள்களை அடுக்கிக் கூறுகின்றார்.

''புற்றில்வாள் அரவும் அஞ்சேன் பொய்யர்தம் மெய்யும் அஞ்சேன்''
'வன்புலால் வேலும் அஞ்சேன்'
'பிணியெலாம் வரினும் அஞ்சேன் பிறப்பினோ டிறப்பும் அஞ்சேன்'
'வாளுலாம் எரியும் அஞ்சேன் வரைபுரண் டிடினும் அஞ்சேன்'
'தறிசெறு களிறும் அஞ்சேன் கழல்விழி உழுவை அஞ்சேன்'
'மஞ்சுலாம் உருமும் அஞ்சேன்'
'கோணிலா வாளி அஞ்சேன் கூற்றுவன் சீற்றம் அஞ்சேன்'
— (திருவா . அச்சப்)

என அச்ச நிலைக்களங்களைக் கூறுவார்.

இவற்றையெல்லாம் கண்டு அஞ்சாத நெஞ்சம் சிவனை எண்ணாமல், திருநீறு தரிக்காமல், அவன் திருவடியில் பற்றிலாது, அகங்தனியாது மற்றையோர் தெய்வத்தை உண்டென்று வாழுகின்றவரைக் கண்டால் அஞ்சுகின்றது என்பார்.

''கற்றைவார் சடைஎம் அண்ணல் கண்ணுதல் பாதம் நண்ணி
மற்றுமோர் தெய்வந் தன்னை உண் [illegible] ன நினைந்தெம் பெம்மாற்
கற்றிலா தவரைக் கண்டால் அம்மநாம் அஞ்சுமாறே''
'வெண்ணீறு அணிகிலா தவரைக் கண்டால்'
'அகம்நெக்கிலா தவரைக் கண்டால்' — அஞ்சுமாறே''

என்றுரைப்பது மிகவும் அற்புதமான பகுதிகளாகும்.

# முத்துக்குமாரசுவாமி பிள்ளைத்தமிழ்

## கம்பன் அடிப்பொடி

ஸ்ரீ குமரகுருபரசுவாமிகள் அருளிய பிள்ளைத்தமிழ் இரண்டு; ஒன்று பெண்பாற்பிள்ளைத்தமிழ்; அதுவே மீனுட்சியம்மை பிள்ளைத்தமிழ். மற்ருென்று புள்ளிருக்கு வேளூர் முத்துக்குமாரசுவாமிப் பிள்ளைத் தமிழ். அஃது ஆண்பாற் பிள்ளைத்தமிழ். இரண்டும் ஒன்றை ஒன்று விஞ்சிநிற்கும் இயல்பின. இன்று இங்கே நம்மால் பேசியும் கேட்டும் மகிழ்வதற்குரியதாயுள்ளது பின்னையதே!

இது புள்ளிருக்கு வேளூர்க் குமாரதேவர் பிள்ளைக்கவி எனவும், புள்ளிருக்கு வேளூர்ச் சேனுபதிப் பெருமாள் பிள்ளைத் தமிழ் எனவும், முத்தையன் பிள்ளைத்தமிழ் எனவும்வழங்கப் பெற்றதாக அறிகிரேம். ஸ்ரீ குமரகுருபரசுவாமிகள் காப்புப் பருவத்தில் காத்தற் கடவுளான திருமாலை வேண்டும்பொழுது, ''கொத்து முத்தமிழ் மொய்த்த கந்தபுரி முத்துக்குமாரனைத் தனிபுரக்க!'' என்பதால் முத்துக்குமாரசுவாமி பிள்ளைத் தமிழ் என்பதே பொருத்தமாகலாம்.

மீனுட்சியம்மை பிள்ளைத் தமிழில் காப்புப் பருவத்தில் திருமால் முதலாக முப்பத்து மூவர் ஈருக முருகன் உள்படப் பதினெருவரைப் பரசுகின்ருர். ஆனுல் முத்துக்குமாரசுவாமி பிள்ளைத்தமிழில் திருமால் முதலாக முப்பத்துமூவர் ஈருகப் பதின்மரையே பரசுகின்ருர். முருகன் இங்கே இடம்பெற்ருனில்லை. காரணம் பிரபந்தமே அவன்பேரில் ஆனதால்தான். அங்கு மீனுட்சிக்குக் காப்பாற்றுமாறு வேண்டிப் பாடல் இல்லை. ஆனுல் துர்க்கையை வேண்டுகிருர். இங்கு முருகனை வேறு எந்தப் பெயராலும் வேண்டினுரில்லை.

இப்பிள்ளைத்தமிழில் வைத்திச்வரன் கோவில் பத்து வேறு பெயர் களால் குறிக்கப் பெறுகிறது. அவையே : 1. கந்தபுரி, 2. புள்ளூர், 3. வேளூர், 4. பருதிபுரி, 5. வேதபுரி, 6. தினகரபுரி 7. பருதிப் பதி, 8. வயித்திநாதபுரம், 9. சடாயுபுரம், 10. வேதப்பதி என்பன ஆம். இவற்றுள் கந்தபுரி 42 இடங்களில் பேசப்படுகிறது. அடுத்து புள்ளூர் 15 இடங்களிலும் பருதிபுரி 8 இடங்களிலும், வேதபுரி 7 இடங்

களிலும், தினகரபுரி, பருதிப்பதி, வயித்திநாதபுரம் ஆகிய மூன்றும் மும்மூன்றிடங்களிலும் சடாயுபுரம், வேதப்பதி இரண்டும் ஒவ்வோரிடத்திலும் குறிக்கப் பெறுவதைக் காணலாம்.

கந்தபுரி என்பதே சுவாமிகளைக் கவர்ந்த பெயர் என நாம் கருதலாம். கந்தன் என்ற சொல் நல்ல தமிழ்ச்சொல். கந்து+அன்=கந்தன் கந்து என்றால் பற்றுக்கோடு அன் ஆண்பால் பெயர் விகுதி. கந்தன் என்றால் பற்றுக்கோடாகவுள்ளவன் எனப் பொருள்படும். கந்தன் என்பது "ஸ்கந்தன்" என்ற சமஸ்கிருதச் சொல்லின் தற்பவம் என்று சிலர் கூறுவது கொள்ளத்தக்கதல்ல. அநியாயமுமாகும்.

இப் பிள்ளைத் தமிழில் உள்ள 101 பாடல்களில் 17 பாடல்கள் நல்ல சந்தப் பாடல்கள். யாவும் அளவியல் சந்தவிருத்தம்; அஃதாவது அடிதோறும் எழுத்தெண்ணிக்கையால் அளவு ஒத்துவரும் விருத்தங்களாம்.

1. வைத்தியநாதன் மீதுள்ள பாடல் அடிதோறும் 26 எழுத்தால் ஆன விருத்தம்.

2. தையல்நாயகி மீதுள்ள விருத்தம் அடிதோறும் 27 எழுத்துக்கள் உள்ளது.

3. கற்பகப்பிள்ளையார் மீதுள்ள விருத்தம் அடிதோறும் 26 எழுத்துக்களால் ஆனது.

4. சப்தமாதர்கள் மீது பாடிய விருத்தம் 28 எழுத்துக்களாலானது.

5. முப்பத்து முக்கோடி தேவர்கள் மீது பாடிய விருத்தம், 80 எழுத்துக்களாவான அடிகளையுடையது.

6. செங்கீரைப்பருவத்தில் 9, 10 ஆவது விருத்தங்கள் அடிதோறும் 28 எழுத்துக்களையுடையன.

7. அங்ஙனமே தாலப்பருவத்தில் 9, 10 ஆவதாக உள்ள விருத்தங்கள் அடிதோறும் 26 எழுத்துக்களையுடையன

8. சப்பாணிப் பருவத்தில் உள்ள 9, 10 ஆம் பாடல்கள் அடிதோறும் 36 எழுத்துக்களையுடையன.

9. முத்தப் பருவத்தின் 9, 10 ஆம் பாடல்கள் அடிதோறும் 42 எழுத்துக்களையுடையன.

10. வருகைப்பருவத்தில் உள்ள 9, 10 ஆம் பாடல்கள் அடிதோறும் 42 எழுத்துக்களையுடையவை.

11. அடுத்து சிறுபறைப் பருவத்தில் உள்ள 9, 10 ஆம் பாசுரங்கள் அடிதோறும் 38 எழுத்துக்களையுடையன.

- காப்புப்பருவத்தில் ஐந்து பாடல்கள் சந்தக்கவியாக அமைந்துள்ளன. அஃதும் அளவியல் சந்தம். எஞ்சிய ஒன்பதில் அம்புலி, சிற்றில், சிறுதேர் அல்லாத ஆறு பருவங்களிலும் 9, 10 ஆம் பாடல்கள் சந்தக் கவிகளாக உள்ளன. அனைத்திலும் 4 பாடல்கள் அளவியல் சந்தமாகவும் எஞ்சிய பதின்மூன்றும் அளவியல் தாண்டகமாகவும் உள்ளன.

மீனாட்சியம்மை பிள்ளைத்தமிழில் எங்ஙனம் "தொடுக்கும் கடவுள்" என்ற தொடக்கத்துப் பாடல் விழுமியதாகக் கருதப்படுகின்றதோ அங்ஙனமே இப்பிள்ளைத்தமிழில்

"உலககுளிர எமதுமதியில்
ஒழுகும்அமுத கிரணமே"

என்ற தொடக்கத்துப் பாடல் அருமையும் பெருமையுமுடையது.

ஸ்ரீ குமரகுருபரர் மொழிப்பற்று மிகுதியும் உடையவர் என்பதை மீனாட்சியம்மை பிள்ளைத்தமிழ் புலப்படுத்துவதைப் போல இப்பிள்ளைத் தமிழும் நமக்கெல்லாம் நன்குணர்த்திக் கொண்டிருக்கிறது.

கொழிதமிழ்க் கவி தழையவே
முத்தமிழ் மொய்த்த கந்தபுரி
பசுந்தமிழின் இசை பயின்றபெடை
தமிழ்வேளூர்
சங்கத்தமிழின் தலைமைப் புலவ
தோலாத முத்தமிழ்
கொழி தமிழ்
தெளி தமிழ்
மும்மைத் தமிழ்
முதற்சங்கத் தலைப்பாவல
அருஞ்சொற்றமிழ்

என்றெல்லாம் மிளிரும் சொற்றொடர்கள் சுவாமிகளின் செந்தமிழ்ப் பற்றுக்கு ஒப்பற்ற எடுத்துக் காட்டுகளாகும்.

முருகப் பெருமான் சுவாமிகட்குப் பேரருள் சுரந்த பெம்மான். எனவே அவர்கட்கு முருகனிடம் எல்லையிலா ஈடுபாடு இருந்திருக்கும். அன்றியும் தமக்கு அப்பெருமானுடைய திருநாமங்களுள் ஒன்றே அமைந்திருப்பதை எண்ணி எண்ணி மகிழ்ந்திருக்கவும் வேண்டும். அந்த வாய்ப்பைப் பயன்படுத்திக் கொண்டு வருகைப்பருவத்தின் முதல் ஐந்து பாடல்களின் ஈற்றடியில் மகுடமாக,

குரவுகமழ் தருகந்த புரியில்அருள்
குடிகொண்ட குமரகுரு பரன்வருகவே!

என்று கூறுவது நயமாகவும் இனிமையாகவும் உள்ளது.

''நாடும் பொருட்சுவை சொற்சுவை தோய்தர, நாற்கவியும்
பாடும் பணியிற் பணித்தருள்வாய்!''

என்று சகலகலாவல்லியை வேண்டும் ஸ்ரீ குமரகுருபரர் அங்ஙனமே சிறந்து விளங்குவதை ஏனைய பிரபந்தங்களைப் போல இப்பிள்ளைத் தமிழும் நமக்கெல்லாம் புலப்படுத்திக் கொண்டு விளங்குகிறது.

அறிவால், புலமையால், பக்தியால், செயற்கரிய செய்த சீர்த்தியால், சீலத்தால், பன்மொழிப் பயிற்சியால் இன்னும் எத்தனை எத்தனையோ சிறப்புக்களால் தமிழகத்தின் நன்மணியாய் விளங்கும் ஸ்ரீ குமரகுருபரரின் புகழ் பரப்பும் இந்தத் திருப்பனந்தாள் ஸ்ரீ காசி மடமும் இம் மடத்திற்கு மிகவும் பொருத்தமான தலைவராக அமைந்துள்ள ஸ்ரீலஸ்ரீ காசிவாசி முத்துக்குமாரசுவாமித் தம்பிரான் சுவாமிகளும் எல்லா வகையாலும் சிறந்து மிக்கோங்க அந்த முத்துக் குமரனையே பிரார்த்தித்து மகிழ்கிறேன்.



********************

# திருவழக்கு

********************

**'ஞானம்'**

இசைஞானியார்: அதாங்க - நம்ம குழந்தை ஆரூரன் - வாசல்லே தேரு கட்டி விளையாடின்டிருந்தானேன்னே – அவனே - நம்ப அரசர் பார்த்தாராம். அவருக்குத் தான் புள்ளையே இல்லையே – நம்ம புள்ளெயெ தத்துப் புத்திரனு எடுத்துக்கிறதா சொன்னுராம். எல்லாரும் சொல்லிண்டிருக்கா. நீங்க இங்கன்னு வெறும்மனே உக்காண்டிருக்கேளே.

சடையனுர்: அப்படின்னு நீ சொல்றது நெஜம்னு - நம்ம ஆரூரன் இந்த நாட்டுக்கே அரசனுவான். நமக்கு இன்னும் என்ன வேண்டும்.

''மகன் தந்தைக் காற்றும் நன்றி இவன் தந்தை

எந்நோற்றுன் கொல் என்னும் சொல்'' ...... அப்படின்னு சொல்லுவா - அவன் ஜாதகமே ஒசந்த ஜாதகம்னு - இவன் ஒருபெரிய மனுஷன் ஆவான்னு நேக்கு அப்பவே தெரியுமே;

இசைஞானியார்: கொழந்தையெ அரசர் கேட்டால் நாம் மறுக்க முடியாது. மறுத்தா அரச தண்டனை தான் கெடைக்கும் - கொழந்தை ஆரூரன் அப்படி அரண் மனைக்குப் போயிட்டான்னு - என் குழந்தையை பாக்காமெ எப்படிங்க இருக்க முடியும்- அவாதான் நம்மெ பாக்கவே விடமாட்டாளே.

சடையனுர்: வல்லான் வகுத்ததே வாய்க்கால் எனும் அந்த வழக்குக்கும் இழுக்குமுண்டோ. யார் யாருக்கு ஆண்டவன் எப்படி கட்டளை இட்டிருக்கிருரோ அப்படித்தான் நடக்கும். நம்ம எண்ணத்திலே என்ன இருக்கு. சற்று பொறுத்துப் பார்ப்போம்.

இசைஞானியார்: இதோ - தங்கம் மாமி - பட்டு மாமி - கோடி யாத்துகோமு மாமி எல்லாரும் வரா - வாங்கோ— வாங்கோ - மாமி இந்த பக்கம் வந்து ரொம்ப நாளாச்சே.

தங்கம் மாமி: வரத்துக்கு ஆத்திலே ஒழியவே இல்லே. இன்னிக்கு ஒரு நல்ல சேதின்னு கேள்விப் பட்டோம் - உன் புள் ளேயெ நம்ம அரசர் தத்து எடுத்துக்கப் போறராம் ஊரே பேசறது. நெஜம்தானு - கேட்டுட்டுப் போக லாம்னு - வந்தோம்; நீங்க ரொம்ப-ரொம்ப குடுத்து வச்சவா - ஆரூரன் பெரிய அதிஷ்டக்காரன்-என்ன.

இசைஞானியார்: என்னமோ மாமி - எல்லாரும் சொல்ரு - என் புள்ளேயெ நான் என்னமா பிரிவேன். அவனெ பாக் காமெ என்னலே இருக்கவே முடியாதே.

பட்டுமாமி: அதோ யாரெல்லாமோ வரா - நாங்கள் போய்ட்டு வரோம் - (மந்திரி பிரதானியர் வருதல்)

சடையனர்: வரணும்- வரணும் -இந்த ஏழைகள் ஆத்துக்கு ஓங்களேப் போல பெரியவா வர குடுத்து வச்சோம். வாருங்கோ அமைச்சரே - பிரதானியரே வரணும். உட்காருங்கள். இசை! இவா உட்கார மணேயை எடுத்துப் போடு— என்ன இப்படி நின்னுண்டிருக்கே -சீக்கிரம் போ.

அமைச்சர்: பரவாயில்லே -இப்படி திண்ணேயிலேயே உட்காருகிறேம். இவைகளே வாங்கி வையுங்கள்.

(தாம் கொண்டு வந்தவைகளேக் கொடுத்தல்)

சடையனர்: இதென்ன பொன் முடிச்சு -பட்டு - கனிவகை இதெல் லாம் எதுக்கு ... ... என்ன விசேஷம் - இசை! இதெல் லாம் எடுத்து உள்ளெ வை.

அமைச்சர்: சடையனரே! ஒரு முக்கிய காரியமாக அரசர் உங்களேக் காணுமாறு எம்மை அனுப்பினர். சொல்லலாமா?

இசைஞானியார்: நன்ன தாராளமா சொல்லுங்கோ -

அமைச்சர்: ஆரூரன் என்ற குழந்தை உங்கள் மகன் தானே?

சடையனர்: ஆமாம் - அவன் - நம்ம - குழந்தைதான் - அவனுக்கு - என்னவாம்.

அமைச்சர்: மிக்க மகிழ்ச்சி. நமது மன்னர் நரசிங்க முனையருக்கு இறைவன் எல்லா பாக்கியமும் கொடுத்தார். புத்திர பாக்கியம் மட்டும் ஏனோ கொடுக்கவில்லை.

சடையனார்: நமது உத்தமமான மன்னருக்கு இது ஒரு பெருங்குறை தான்.

அமைச்சர்: அந்தக் குறையை நீங்கதான் தீர்க்க வேண்டும்.

சடையனார்: நானா- என்னால் என்னசெய்ய முடியும். எம்பெருமான்- அடியார்க்கு அருள் செய்யும் அம்பலவாணன் அருளாரமுதத்தை வாரி வழங்கும் அருளாளர் அவனருளன்றோ நடக்கவேண்டும்.

அமைச்சர்: தெய்வம் மனுஷரூபி- ஒவ்வொரு ஆணும் -பெண்ணும் ஆண்டவனின் நடமாடும் கோயில் அல்லவா. அன்பர் பணி செய்ய என்னை ஆளாக்கி விட்டுவிட்டால் இன்ப நிலை தானே வந்து எய்தும் என்றாரே-அதுபோலநீங்கள் நினைத்தால் நமது மன்னர் குறை தீரும். என்ன யோசிக்கிறீர்.

சடையனார்: இதற்கு நான் என்ன செய்யமுடியும் என்றுதான் யோசிக்கிறேன்:

அமைச்சர்: தங்கள் திருக்குமாரன் ஆரூரன் இருக்கிறானே. ...

சடையனார்: அவனுக்கு என்ன?

அமைச்சர்: அவன் இன்று வீதியில் விளையாடிக் கொண்டிருக்கும் போது-நமது மன்னவன் காணநேர்ந்தது.

சடையனார்: அப்படியா-

அமைச்சர்: ஆம்-கண்டவுடன் ஈசன் திருவுள்ளம் போலும் அவனைத் தமது மகனுக்கிக் கொள்ள வேண்டும் என்று எண்ணம் கொண்டார். உங்கள் மகன் வருங்கால மன்னனாவான். அவனுக்கும் உங்களுக்கும் பெரிய யோகம்தான். மன்னவன் எண்ணத்தை நீங்கள் மறுக்கமாட்டீர்கள் என்ற நம்பிக்கையுடன் வந்துள்ளோம். உங்கள் இசைவுதான் தேவை:

சடையனார்: ஆண்டவன் அருளும் அரசன் விருப்பமும் அப்படியிருக்குமானால்-நான் எவ்வாறு மறுக்கமுடியும்?

இசைஞானியார்: என் குழந்தையை அரசர் அழைத்துக்கொண்டால் எங்களை அரண்மனைக்கே விடமாட்டீர்களே. என் பிள்ளையெ பார்காம நான் எப்படி இருப்பேன்? சுவாமி! கடவுளே! இதுவும் உன் சோதனையா (அழுதல்)

அமைச்சர்: அம்மா அவ்வாறு எண்ணி நீங்கள் வருந்தவேண்டாம்; நீங்கள் இருவரும் அரண்மனைக்கே வந்து விடலாம்- உங்கள் குழந்தையை அரசபோகத்துடன் நீங்களே வளர்க்கலாம். ஆரூரன அரசனுக்குரிய கலைகளை எல்லாம் கற்றுக் கொள்ளுவான்-இப்போது சம்மதந்தானே?

சடையனர்: இசை! இப்போது என்ன சொல்லுகிறாய்?

இசைஞானியார்- நான் சொல்ல என்ன இருக்கு. நீங்க சம்மதம்னு- எனக்கும் சம்மதம்தான்.

அமைச்சர்: உங்கள் இருவர் சம்மதமும் கிடைத்துவிட்டது மிகவும் மகிழ்ச்சி. நாளை அரச மரியாதையுடன் உங்களை அரண் மனைக்கு அழைக்கிறோம்-மன்னனை அவையில் சந்திக் கலாம். இந்த நற்செய்தியை மன்னவனுக்கு அறிவிக்கி றோம்-விடை பெறுகிறோம். (அமைச்சர் முதலியோர் செல்லுதல்)

சடையனர்: இசை, என்ன ஆச்சரியமான செயல்-மனதில் நினைக்கக் கூடமுடியாத ஒரு மாபெரும் செயலை ஆண்டவன் செய்கிறார். ஆட்டுவோன் ஒருவன் இன்றி ஆடுமோ பாவை தான். எல்லாம் அவன் செயல்.

இசைஞானியார்: நம்மஆரூரனுக்குஇந்தச் செய்திதெரியுமோஎன்ன வோ-அவன் என்ன சொல்றான்னு கேக்கணும். அதோ-ஆரூரனே வந்துட்டானே-அப்பா உன்னைப் பத்தித்தான் பேசிண்டே இருந்தோம்; வந்துட்டே நீயே.

ஆரூரன்: என்னம்மா-என்ன விசேஷம்?

இசைஞானியார்: ஒரு நல்ல சேதி. நீ நாளெலேருந்து ராஜா அரண் மனையிலே வளரணும்; நீ பெரியமன்னனுவரணும்.

(வளரும்)

# கௌசிகம்

திருமுறைக் கலாநிதி, இசைநம்பி
S. கல்யாணசுந்தர தேசிகர்
ஸ்ரீ காசிமடம் திருமுறைப்பணி, கும்பகோணம்.

கௌசிகம் என்ற பண் மிகப் பழைமையான தமிழிசைப் பண்: இது மங்களகரமான பண்ணுகும். சம்பந்தர் சுந்தரர் ஆகிய இருவர் பாடிய தேவாரத் திருமுறையில் தான் இப்பண் அமைந்திருக்கிறது.

இந்தப் பழைமை பொருந்திய கௌசிகப் பண்ணின் இராக சஞ்சாரக்கிரமத்தின் முழு விபரம் தெரியப் போதுமான ஆதாரம் கிடைக்கவில்லை. ஆதலால் ஓது வார்கள் பாடிவரும் வழக்கமாகிய இராக சஞ்சாரத்தைக்கொண்டு ஆராயுமிடத்துக்காலக்கிரமத்தில் வழங்குகின்ற 20வது மேளமாகிய நடபைரவி என வழங்கும் இராகத் தின் ஜன்னியமாக இது அமைந் திருக்கிறது. இதன் ஆரோகணத் தில் சுரவக்ர சஞ்சாரமும், அவ ரோகணத்தில் பூர்ண சுர சஞ்சார மும் அமைந்திருப்பதை அறிய லாம்.

விபரம் வருமாறு:

ஆரோகணம்-ஸகரீகம பதநீஸ்.
அவரோகணம்-ஸ் நீதப மகரிஸ

சதுஸ்ருதிரிஷபம், சாதாரண காந்தாரம், சுத்தமத்திமம், சுத்த தைவதம், கைசிக நிஷாதகம் என்பன இதன் சஞ்சாரக்கிரமம் இந்தக் கௌசிக ராகம் கம்பீர மான அசைவுகள் நிறைந்துகருணு ரசத்தின் நயத்தோடு சேர்ந்தது. இதன் சாயல் நிஷாதகத்தில் முடி கிற மூர்ச்சனையை ஆதாரமாகக் கொண்டது. இதன் நிஷாதகம் கருணு ரசத்திற்குரிய சுரமான தால் அதில் முடிகிற சாயையும் மிருதுத் தன்மை வாய்ந்தது: மூர்ச்சனை முடியும் சுரம் நிஷாதக மானதால் இதன் ஆரம்பசுரம் சட்சமாகும். கௌசிகப்பண்ணின் மூர்ச்சனையின் முதல் சுரமாகிய சட்சத்திற்குச் சம்வாதிகளாகிய மத்திம பஞ்சமமும் இதன் மூர்ச் சனையில் அமைந்திருக்கிறது. மூர்ச்சனையில் உள்ள தைவதம் இராக சாயையின் மிருதுத் தன்மைக்குப் பொருத்மாக இருக்கும். இக்காரணம் பற்றியே நிஷாதகத்தோடு முடியும் அவ ரோகண சஞ்சாரத்திலும், நிஷா தகத்திலிருந்து ஆரம்பமாகும்

ஆரோகண சஞ்சாரத்திலும்இந்த ராகத்தில் சுத்த தைவதம் பேசு கிறது. பஞ்சம சஞ்சாரத்தி லிருந்து மேல்சட்சம சஞ்சாரம் போகும் போது கம்பீர சாயலு டனும் நிஷாதசுத்திலிருந்து அவ ரோகண சஞ்சாரம் வரும்போது மிருதுவானதும், இரங்கல் முதலியஉள்ளக் கிளர்ச்சிகளுக்குத் தகுதியானதும் ஆன சாயை நமக்குக் கிடைக்கிறது.

இத்தகைய சிறப்பு வாய்ந்த கௌசிகப்பண்ணில் சம்பந்தர் அழகாகப்பாடியிருக்கும் பாடலைப் பார்ப்போம்.

காதலாகிக் கசிந்து கண்ணீர்
மல்கி
ஓதுவார்தமை நன்னெறிக்
குய்ப்பது

என்ற சஞ்சாரம் வரை கம்பீர மான அசைவுகளும் கருணரசத் தின் நயங்களும் அமைந்திருக் கின்றன.

வேதநான்கினும் மெய்ப்பொரு
ளாவது
நாதன் நாமம் நமச்சிவாயவே.

என்ற சஞ்சாரத்தில் கம்பீரச் சாயலும் மிருதுவான இரங்கல் முதலிய உள்ளக்கிளர்ச்சிகளுக்குத் தகுதியான சாயலும் நமக்குக் கிடைக்கின்றன.

இந்தக் கௌசிக இராகம் நய மும் கனமும் சமமாக அமைந்த ஓர் அரிய இராகம், மனதை ஒருவழிப்படுத்தும் இராகங்களில் முதலிடம் பெற்ற இராகம்; இதனைப் பாடும்போது பஞ்சம சஞ்சாரத்தின் கார்வையுடன் பக்கமுள்ள மத்திம தைவதங் களையும் சேர்த்துக் கொண்டு அசைத்துப் பாடினல் யாவரும் தன்னை மறந்து ஆனந்தப் பரவசத் தில் மூழ்குவதைக் காணலாம்.

ஆலயங்களில் நடைபெறும் விழாக்காலங்களில் யமசந்தி (தெற்குச் சந்தி) வரும் போது அந்தச் சந்திக்குரிய தெய்வத்தை மகிழ்விக்கக் ''கௌசிகப்பண் அருளிப்பாடுக'' என்று ஆகம சாஸ்திரத்தில் கூறப்பட்டிருக் கிறது.



# இறைபணி

கண்ணபிரான்

உஷக் காலம் விழித்துக் கொண்டு மிதமான குளிர்ச்சியான பார்வையை எங்கும் செலுத்தியது.

அந்தப் பெரியவர் படித்துறையில் அமர்ந்து கொண்டு மௌனமாக இரவுத் தேவியின் இன்ப அணைப்பில் திளைத்து மயங்கிய நிலையில் ஓடிக் கொண்டிருக்கும் காவிரியையே பார்த்துக் கொண்டிருந்தார்.

தேய்பிறைச் சந்திரன் மேல் வான் விளிம்பில் இருந்து சோகையான புன்னகை செய்தது.

பெரியவர் நீரில் இறங்கினார்.

'பரிமளமான உஷா தேவியே! இதோ நீ புத்துயிர் பெற்றாய். உன் வரவு எனக்கு நன்மையாகட்டும். உன் குளிர்ச்சி என் வெப்பத்தைத் தணிக்கட்டும். ரிஷிகளின் வாழ்த்துக்களைப் பெற்ற தாயே! நானும் உனை வாழ்த்துகின்றேன். பிரார்த்திக்கின்றேன்.'

நீராடினார்.

'தெய்வங்களே, தேவர்களே, ரிஷிகளே, முன்னோர்களே உங்களை வணங்குகிறேன்'.

ஆடைகளைத் துவைத்தார்.

'என் மன அழுக்கு நீங்கட்டும்; என் மனம் தூய்மையாகட்டும்'.

அவர் கரையேறினார்.

கீழ்வானம் வெளுக்கத் தொடங்கியது. காகங்கள் கரைய ஆரம்பித்தன. தூரத்தே சேவலின் கொக்கரக்கோ கேட்டது.

சந்தியா வந்தனம் செய்தார்;

'சந்தியா தேவியே! உனை வணங்குகிறேன். சகல உயிர்களையும் சந்தோஷமாக வாழச் செய்வாயாக. எல்லோர் மனதிலும் இன்பத்தையே பரப்புவாயாக'.

அவர் நடக்க ஆரம்பித்தார் கையில் கெண்டியுடன். வாய் சுலோகங்களை முணுமுணுத்துக் கொண்டிருந்தது.

வீட்டை அடைந்தார். வேட்டியைக் கொடியில் உலர்த்தினார். வேறு கட்டிக் கொண்டார் பஞ்சகச்சமாக.

அடுப்பைப் பற்ற வைத்தார்; காப்பி போட்டார். பாதியை ஆற்றி ஒரு டம்ளரில் எடுத்துக் கொண்டு பக்கத்து அறையின்

கதவைத்திறந்துகொண்டு உள்ளே போனுர்.

அவர் கல்யாணியைப் பார்க்க மனம் தடுமாற நின்று விட்டார்.

கிழித்த நாராய்ப் படுத்துக் கொண்டிருந்த கல்யாணியின் பள்ளமான கண்கள் மூடியிருக்க வாய் திறந்திருக்க ஈக்கள் மொய்த்தன.

அவர் அருகில் போய்க் கையைத் தூக்க, கை துவண்டது.

அவள் போய் விட்டாள் தன் கூடு விட்டு.

அவர் அருகில் அமர்ந்து டம்ளரை வைத்துவிட்டு அவளையே பார்த்துக் கொண்டிருந்தார்.

பின் கண்களை மூட ஓரத்தில் நீர் முத்து எட்டிப் பார்த்தது.

கல்யாணி அவரின் மனைவி. கல்யாணமாகி இரண்டு வருடம் தான் இன்பமாக இருந்தார்.

கல்யாணிக்கு இழுப்பு நோய். மார்பில் எப்பவும் கர் கர் என்று இளைத்து வந்தாள், ஏதோ நடமாடிக் காரியம் செய்வாள்.

கடந்த ஐந்தாறு வருடமாகப் படுத்த படுக்கைதான்.

அவர்தான் சகலமும். தன் காரியம். அவள் காரியம். தொழில் காரியம். எல்லாம்.

மல ஜல உபாதைக்கு அவரே தூக்கிப் போய்க் கொல்லையில் விட்டு விட்டுப் பின் தூக்கி வந்து படுக்கையில் கிடத்தி..

'கடவுளே, சீக்கிரம் எனக்கு இதிலிருந்து விடுதலை கிடைக்காதா?.

இதோ இப்போது கிடைத்து விட்டது.

இது உண்மையில் விடுதலை தானு?

'இல்லை' என்கிறது அவருடைய அறிவு.

மனம் விடுதலையை நாடியது அறிவு இப்போது இல்லைஎன்கிறது

ஏதோ காரணத்தால் இறையின் திரு உளமே இப்படிப்பட்ட மனைவியாகக் கிடந்து அவர் பணிவிடை செய்ய வேண்டியிருந்தது.

அவளுக்கு உண்மையாகச் செய்யும் பணிவிடை இறைவனுக்கு உண்மையாகச் செய்யும் பணிவிடை.

அவருடைய உண்மையான இறைபணி இனி, தொடர வழியில்லை.

அவர் எழுந்து கொண்டு வெளியில் வந்தார்.

தெருவில் சொல்ல வேண்டும்: அவருக்கு என்னமோ போல வந்தது. திண்ணையில் சடேரென சாய்ந்தார்.

எதற்காகவோ இதுவரை அடங்கிக் கட்டுப்பட்டுக் கிடந்தது போல அவருடைய உயிரும் அவரை விட்டு விலகிச் சென்று விட்டது.

உ

# சைவ வேளாளர் சங்கம்

## கும்பகோணம்

# சுற்றறிக்கை

**சைவ வேளாளச் சமூகப் பெருமக்களே!**

நமது சமூகத்தின் முன்னேற்றம் கருதித் தருமபுரம், குன்றக்குடி, திருப்பனந்தாள் ஆதீனத் தலைவர்களின் நல்லாசியுடன் 30—8—81 அன்று கும்பகோணத்தில் "சைவ வேளாளர் சங்கம்" என்ற பெயரில் ஒரு சங்கம் தொடங்கப் பெற்றிருக்கிறது.

**சங்கத்தின் குறிக்கோள்கள்:-**

1. சைவ வேளாளச் சமூகத்தார் அனைவரும் ஒன்று சேருதல்
2. சமூகத்தின் பாதுகாப்பிற்கும் முன்னேற்றத்துக்கும் பாடுபடுதல்
3. சமூக மாணவ மாணவியரின் கல்வி வளர்ச்சிக்குப் பாடுபடுதல்
4. அரசியல் கட்சிகளில் சேராது பொதுத்தொண்டில் ஈடுபடுதல்
5. மாவட்டம் அல்லது மாநில அளவில் நமது சமூக சங்கங்களை இணைத்து வலிமை ஆக்குதல்
6. ஆலய வழிபாடும் சமயத் தொண்டும் ஆற்றுதல்
7. சைவ சமூகத்தாருடைய நன்மை தீமைகளில் பங்கு கொண்டு தொண்டாற்றுதல்.

**நிர்வாகக் கூட்டம்:** 4—10—81 அன்று முத்தைய புரத்தில் திரு. காங்கேயன் பிள்ளை அவர்களின் இல்லத்தில் முதல் நிர்வாகக் கூட்டம் கூடியது. அப்போது, இச் சங்கத்தைப் போல் ஒவ்வொரு ஊரிலும் சங்கம் ஏற்படுத்த வேண்டும் என்றும் இதற்குமுன் ஏற்பட்ட சைவவேளாளர் சங்கங்களும் இனிமேல் ஏற்ப்டும் சைவவேளாளர் சங்கங் களும் தஞ்சைமாவட்டஅளவில் ஒருதலைமையின் கீழ் ஒருங் கிணைந்து செயல்பட வேண்டும் எனவும் அதன் பின் தமிழ் நாடு முழுவதும் உள்ள அனைத்துச் சைவ வேளாளர் சங்கங்களும் மாநில அளவில் ஒருங்கிணைந்து செயல்பட வேண்டும் எனவும் தீர்மானிக்கப் பட்டது. முதலில் தஞ்சை மாவட்ட அளவில் ஒருங்கிணைப்பு ஏற்படுத்துவதற்காக ''தஞ்சை மாவட்ட அமைப்பாளர் குழு''வின் தலைவராகக் கும்பகோணம் திரு. A. G. தாசையாபிள்ளை அவர்கள் ஒருமனதாக நியமனம் செய்யப்பட்டுள்ளார்.

எனவே ஆங்காங்கே உள்ள சைவ வேளாளர் சங்கத் தினர்களும், புதிதாகச் சங்கம் தோற்றுவிக்க விரும்புகிற வர்களும் இதன் தொடர்பான விபரங்களை அறிவதற்குக் கீழ்க்கண்ட முகவரியாளருடன் தொடர்பு கொள்ளக் கோருகிறோம்.

இங்ஙனம்

**பா. சோமசுந்தரம் பிள்ளை**
தலைவர்

**சி. திருநாவுக்கரசு** *M. A*
செயலர்

---

தொடர்பு கொள்ள வேண்டிய முகவரி:

திரு. *T. N.* **அருணாசலம் பிள்ளை** அவர்கள்
சைவ வேளாளர் சங்கத் தொடர்பாளர்
ஸ்ரீ காசிமடம்
திருப்பனந்தாள் 612 504

# ஆலய பூஜை படிக்காசு நிதிக்கு

## நன்கொடையளித்த அன்பர்கள் விபரம்

4—10—81 வரை கூடுதல் 12,982—60

| | | |
|---|---|---|
| 1. | மாயூரம் P. பானுமதி B. A. | 5-00 |
| 2. | சிந்தாதிரிபேட்டை G. N. ரெங்கநாத முதலியார் | 25-00 |
| 3. | மேலமணக்குடி கு. கனகசபை | 10-00 |
| 4. | திருப்பனந்தாள் T. M. வெள்ளைவாரணம் | 5-00 |
| 5. | குடந்தைச் சிவனடியார் திருக்கூட்டம் அன்பர், செல்வமுத்துக்குமாரசுவாமி | 51-00 |
| 6. | திருச்செங்கோடு T. A. மாரிமுத்து | 20-00 |
| 7. | திருநெல்வேலி T. V. சங்கரக்குமாரு | 5-00 |
| 8. | P. அருள் நமசிவாயம் (தஞ்சை) | 10-00 |
| 9. | சுசீலா அருள்நமசிவாயம் ,, | 10-00 |
| 10. | S. கமலவேணி ,, | 10-00 |
| 11. | துர்க்காகுடில் அப்பு (குடந்தை) | 5-00 |
| 12. | அடையார் S. R. வெங்கட்ராம் | 5-00 |
| 13. | கணியூர் A. S. நடராஜன் | 5-00 |
| 14. | சமுத்தூர்பட்டி க. பழநிக்கவுண்டர் | 5-00 |
| 15. | தளவாய்பாளையம் D.S வெங்கிட்டுசாமி கவுண்டர் | 5-00 |
| 16. | தளவாய்பாளையம் D.S. விஸ்வனுதக் கவுண்டர் | 5-00 |
| 17. | பொள்ளாச்சி க. சுப்ரமண்யம் | 5-00 |
| 18. | கொள்ளுப்பாளையம் R. ஷண்முகவேல் | 5-00 |
| 19. | சின்னும்பாளையம் சு. சின்னதம்பி கவுண்டர் | 5-00 |
| 20. | வீரல்பட்டி K. சென்னியப்ப கவுண்டர் | 5-00 |
| 21. | நடுவலவு K. காளியம்மாள் | 5-00 |

5—11—81 வரை கூடுதல் 13,188-60

உ

சிவ சிவ

திருவண்ணாமலையில்

# திருக்கார்த்திகைப் பெருவிழா
# திருமுறை இன்னிசை விழா

திருப்பனந்தாள் ஸ்ரீ காசிமடத்து 21 ஆவது அதிபர்

**ஸ்ரீலஸ்ரீ காசிவாசி முத்துக்குமாரசுவாமித் தம்பிரான் சுவாமிகள் அவர்களின்**

அருளாணையின் வண்ணம் நடத்தப்பெறுவது

30—11—81 உ முதல் 29—12—81 முடிய

துன்மதி ஆண்டு கார்த்திகைததிங்கள் 15ம் நாள் முதல் கார்த்திகைத் திங்கள் 24ம் நாள் முடிய திருவண்ணாமலையில் திருக்கார்த்திகைப் பெருவிழாவில் நாடோறும் திருமுறைப் பாராயணம் நடைபெறும்.

திருமுறைவாணர்கள்:-

1. தேவார இசைமணி,
   திரு. பி. இராமச்சந்திரன்,
   ஆசிரியர், தேவாரப்பாடசாலை, விருத்தாசலம்.
2. தேவார சங்கீத பூஷணம்,
   திரு. தி. சா. தண்டபாணி, ஸ்ரீ கம்பகரேஸ்வர சுவாமி தேவஸ்தான ஓதுவார், திருபுவனம்.
3. தேவாரமணி,
   திரு. S. திருநாவுக்கரசு தேசிகர்,
   ஸ்ரீ காசிமடம் கட்டளை ஓதுவார், திருவண்ணாமலை
4. தேவாரமணி,
   திரு. M. முத்தையன் தேசிகர் ஸ்ரீ அருணாசலேசுவரர் தேவஸ்தானம், திருவண்ணாமலை.
5. திரு. S. A. கோபாலன் — வேய்ங்குழல், சிதம்பரம்.
6. திரு. கோ. வேங்கடராமன் — மிருதங்கம், திருப்பனந்தாள்.

அருளாணையின் வண்ணம்

திரு. E. பிச்சையா பி. ஏ.
நிர்வாக அதிகாரி
ஸ்ரீ அருணாசலேசுவரர் தேவஸ்தானம்
திருவண்ணாமலை.

முத்து. மெய்கண்டதேவன்,
மேலாளர்
ஸ்ரீ காசிமடம்
திருப்பனந்தாள்

# நெஞ்சு விருதூது

தெளிவுரை:

கு.சுந்தரமூர்த்தி எம். ஏ., திருப்பனந்தாள்.

— மட்டாரும்

பாடலார் ஆடலார் பண்பலார் நண்பலார்
ஆடலார் ஆடல் அகன்பதியாம் - கூடலார்
காணக் கிடையாதான் காண்பார்க்குக் காட்சியான்
பாணர்க்கு இலகு பலகையிட்டான் - சேணில்
சிறந்த உருவான் திருமாலுக்கு எட்டான்
நிறைந்த திருவுருவில் நிற்போன் – கறங்குடனே
சூறைசுழல் வண்டு சுழல்கொள்ளி வட்டமெனும்
மாறு கருணையினுல் மாற்றினுன் – நீறணிந்த
105. மெய்யன் நிமலன் அமலன் அருள் வீடளிக்கும்
ஐயன்அறி வுக்கறி வாயினுன் - பொய்யர்பால்
பொய்மையாய் நின்ருன் புரிந்தவர்தம் நெஞ்சத்து
மெய்ம்மையாய் நின்று விளங்கினுன் – கைமழுவன்
அத்தன்பால் நீசென்று அடையும் இடத்தையெலாம்
சித்தஞ்சேர் நெஞ்சமே செப்பக்கேள்

(தெ-ரை) தேனினும் 'இனிதாகப் பாடுபவரும், நன்கு ஆடுபவரும், அவ்வாறு ஆடுதற்கேற்ப மெய்வண்ணம் (அபிநயம்) காட்டுபவரும், நற்குணம் இல்லாதாரிடத்து நட்புக்கொள்ளாதவரும் ஆகிய சான்ருேர்கள் வாழும் இடமகன்ற நகரமாய மதுரையின்கண் வீற்றிருக்கும் பெருமான் ஊனக்கண் கொண்டு பார்த்தற்கு அரியான். ஞானக்கண் கொண்டு காண்பார்க்கு இனிய உருக் காட்டி ஆட்கொள்ளுபவன். பாணர்க்குப் பொற்பலகை வழங்கியவன். செக்கர் வானத்திலும் சிறந்த செம்மை நிறம் உடையான். திருமாலும் சென்றுணராச் சேவடியான். அன்னனுயினும் யாண்டும் நிறைந்து நிற்பவன். காற்ருடி, சுழல்காற்று, சுழல்வண்டு, சுழற்றும் கொள்ளிக் கட்டை ஆய பொருள்கள் போன்று வினைவயத்தால் மாறி மாறிப் பிறந்திறக்கும் தன்மையைத் தன் கருணையினுல் மாற்றினுன். திருநீறணிந்த திருவுருவினன், தூய வடிவினன்; இயல்பாகவே பாசங்களின் நீங்கியோன். உயிர்கள் மாட்டு வைத்த பெருங்கருணையினுல் வீடுபேற்றை வழங்குதற்குரிய தலைவன். உயிர்கள் அறிந்துணர்தற்குத்

தான் அறிவாக நின்று உணர்த்துபவன். நிலையில் பொருள்களையே பற்றி நிற்பாரிடத்துக் காண்டற்கரியனாய் நிற்பான். தன்னை விரும்பி வழிபடுவார்தம் நெஞ்சத்தில் விளங்கி நின்று அருள்புரிவான். கையில் மழுவுடையான். எனது தந்தையாக விளங்கும் அப்பெருமானிடத்து நீ செல்லுதற்குரிய நெறியையும் அங்ஙனம்செல்லுங்கால் விழிப்பாகக் கொள்ள வேண்டிய அறிவையும் சிந்தித்தலைப் பொருந்தி நிற்கும் நெஞ்சமே! யான் கூறக்கேட்பாயாக!.

மட்டு-தேன். பண்பு அலார்-பண்பு இல்லாதாரிடத்து. நண்பு அலார்-நட்புக்கொள்ளாதவர். ஆடல் ஆடலார்-தாம் ஆடுதற்கேற்ப மெய்வண்ணமும் காட்டுவார். காண-ஊனக்கண்களால் காண. காண்ப பார்க்கு-ஞானக்கண்ணினால் காண்பார்க்கு. 'அகத்தில் கண்கொண்டு காண்பதே ஆனந்தம்' என்னும் திருமுறையும். பாணர்க்கு-பாணபத்திரருக்கு. இவர் நாளும் மாமாரி இடைநனைந்தும் அதனைப் பூமாரி எனக்கருதி ஆலவாய்ப் பெருமானிடத்துச் சென்று, அவன் கருணை மாரியினைத் தேன்மாரிபொழிவதெனத் தன் யாழினால் வாசிக்கும் கடப்பாடுடையவர். அவ்வாறு பாடிய பாணர்க்கும் அவர்தம் யாழிற்கும் குளிர் தாக்காதவாறு பொற்பலகை வழங்கினன் இறைவன். இதன் விரிவைத்திருவிளையாடற்புராணத்துப்பலகையிட்ட படலத்தில் காண்க சேண்-விண்: செக்கர் வானம்: 'செவ்வானன்ன மேனி என்றதும் காண்க. கறங்கு-காற்றாடி. சூறை-சுழற்காற்று:சூறுவளி. கொள்ளி வட்டம்-கொள்ளிக்கட்டை. நிமலன்-தூயவடிவினன்: அருள் வடிவினன். அமலன்-இயல்பாகவே பாசங்களின் நீங்கியோன். புரிந்தவர்-இறைவனின் பொருள்சேர் புகழையே நினைந்தும் வாழ்த்தியும் வருவோர். புரிதல் எப்பொழுதும் சொல்லுதல், 'இறைவன் பொருள் சேர் புகல் புரிந்தார் மாட்டு' என்னும் திருக்குறளும் காண்க.

— நித்தலுமே

107. பூசிமுடித்து உண்டு உடுத்துப் பூங்குழார் தங்கலவி
ஆசைதனில் பட்டுஇன்ப ஆர்கலிக்குள்-நேசமுற
நின்று திளைக்கும் அதுமுத்தி யல்லதுவேறு
ஒன்று திளைக்கும் அதுமுத்தி அன்று என்று
இலகா இருளலகை போல் இகலே பேசும்
உலகா யதன்பால் உறாதே-பலகாலும்
தாம் பிரமம் கண்டவர்போல் தம்மைக்கண்டு ஆங்கதுவே
நாம் பிரமம் என்பவர் பால் நண்ணாதே-ஊன்தனக்குக்

கொன்றிடுவ தெல்லாம் கொலையல்ல என்றுகுறித்து
என்றும் அறமே தெய்வம் என்று என்று-வென்றிப்
பொறையே யெனும் புத்தன் பொல்லாத புன்சொல்
மிறையே விரும்பி விழாதே-நிறைமேவி
வாழ்பவர்போல் மன்னுடம்பில் மன்னும் உரோமம் பறித்துத்
தாழ்வு நினை யாது துகில் தான் அகற்றி- ஆழ்விக்கும்
அஞ்சும் அகற்றும் அதுமுத்தி என்று உரைக்கும்
வஞ்சமணன் பாழி மருவாதே-செஞ்சொல் புனை
ஆதிமறை ஓதி அதன் பயன் ஒன்றும் அறியா
வேதியர் சொல் மெய்யென்று மேவாதே-ஆதியின்மேல்
உற்ற திரு நீறும் சிவாலயமும் உள்ளத்துச்
செற்ற புலையர்பால் செல்லாதே-நற்றவம்சேர்
வேடமுடன் பூசை அருள் மெய்ஞ்ஞானம் இல்லாத
மூடருடன் கூடி முயங்காதே-நீட
அழித்துப் பிறப்பது அறியாது அரனைப்
பழித்துத் திரிபவரைப் பாராதே

(தெ-ரை) நாள்தொறும் நறுமணப் பொருள்களைப் பூசி மலர் முடித்துச் சுவை உணவு உண்டு பகட்டான ஆடை உடுத்தும் அழகிய கூந்தலையுடைய மகளிரிடத்துத் துய்க்கும் வேட்கை உற்று அச்சிற்றின்பமாய கடலுள் நாளும் பற்றுக்கொண்டு திளைப்பதே வீடுபேறு என்றும், இதுவன்றி இறையருள் வழி நின்று அவ் வருள் வெள்ளத்தில் கலந்து இன்புறும் வீடுபேறு என்பது ஒன்றில்லை என்றும் கூறி காரிட்ட ஆணவப் பேரிருளில் உழன்று திரியும் பேயைப் போல உண்மைக்கு மாறுபடவே பேசும் உலகாயத ரிடத்து நீ சென்று விடாதே. பன்முறையும் தாம் பரம்பொருளைக் கண்டவரைப் போலக் கூறி உண்மையில் தம்மையல்லது காணாது தாமே பிரமம் எனக் கூறுவாரிடத்தும் செல்லாதே. தன்பொருட்டுக்கொல்வதெல்லாம்கொலைஅல்ல என்றும் அறமே தெய்வம் என்றும் எஞ்ஞான்றும் வெற்றி தருவது பொறையே என்றும் புத்தன் கூறும் இழிசொல்லின் வழிக்குற்றத்தைச் செய்து திரியாதே. குணங்கள் பலவற்றாலும் நிறைந்து வாழ்வார் போன்று தம்மைக் கருதிக் கொண்டு தம் உடம்பினுள் ஒரு கூறாக விளங்கும் தலையில் பொருந்தியிருக்கும் மயிரைப் பறித்தும், அற்றம் மறைத்தற்குரியது ஆடை என்பதையும் அறியாது அதனை அகற்றியும், பிறவிக்கு ஆட்படுத்தும் உருவம் வேதனை குறிப்பு பாவனை விஞ்ஞானம் என்னும் ஐவகைக் கந்தங்களையும் அகன்றும் வாழ்வதே வீடுபேறு

எனக் கூறும் வஞ்ச மனம் பொருந்திய சமணர்களின் வாழ்விடத்தைச் சாராதே. செவ்விய சொற்களாலாயதும் கால எல்லைக்கு அப்பாற் பட்டதுமான மறைகளை ஓதி, ஆனுல் அவற்றின் பயனை உணர்ந்து தெளியாத வேதியனின் சொற்களை உண்மை எனக் கருதாதே. முன்னைப் பழம்பொருளாய் உள்ள சிவபெருமானின் திருமேனியில் நின்று இலங்கும் திருநீற்றையும் சிவபெருமானது திருக்கோயில் களையும் உள்ளத்தில் எண்ணி வழிபடாத இழிந்தவரிடத்துச் சேராதே. உயிர் உய்தற்குரிய திருவேடமும், சிவபூசையும், அருள்தன்மையும், மெய்யுணர்வும் இல்லாத அறிவற்ருேரிடத்துச் சென்று கூடாதே. வழிவழியாகப் பிறந்திறந்து வரும் சிறுதெய்வங்களை உண்மை உணராது பேணியும், பிறவா யாக்கைப் பெரியோனுகிய சிவபெருமானைப் பழித்தும் திரிபவரைப் பாராதே.

நெஞ்சத்தைத் தம் தலைவனிடத்துத் தூது விடும் ஆசிரியர் இடையில் இத்தகையோர் பால் சேரல் ஆகாது என எச்சரிக்கின்ருர்; தவறிச் செல்லின் தம் குறிக்கோள் நிறைவேருததுடன் தூது செல்லு தற்குரிய நெஞ்சும் கீழ்மையுறும் எனக் கருதி இவ்வாறு கூறு கின்ருர். அவ்வாறு சேர்தற்குரியர் அல்லாதாராகிய எண்மரைக் குறிப்பிடுகின்ருர் ஆசிரியர். அவர்தம் நெறியும் நீர்மையும் இங்குச் சுருங்கக்கூறப்படுகின்றன. (1) உலகாயதர்: மகளிர் வயப்பட்டு நின்று துய்க்கும் இன்பமே வீடுபேறு என்பர் இவர்.

ஊடுவது உணர்வது உற்ற கலவிமங் கையரை உள்கி
வாடுவது அடியில் வீழ்ந்து வருந்துவது அருந்த வம்பின்
கூடுவது உணர்வு கெட்டுக் குணமெல்லாம் வேட்கை யேயாய்
நீடுவ தின்ப முத்தி யித்தில் நின்ருர்கள் முத்தர்.

என இவர்தம் கருத்தும் பயனும் சிவஞான சித்தியார் பர பக்கத்தில் விரித்துக்கூறப்பட்டுள்ளன. (2) மாயாவாதிகள்: இவர்கள் தம்மையும் தம் உயிர்க்குயிராக விளங்கும் இறைவனையும் நன்கு அறியாதவர்கள். 'நெருப்பென்ருல் வாய்சுடுமோ நெய் பால் தேன் கட்டி, கருப்பென்ருல் தித்தியா காண் நீ —விருப்பமுடன், நீ பிரமம் என்றக்கால் நீ பிரமம் ஆயினையோ, நீ பிரமம் சற்குருவால் நில்' என்னும் சிவபோக சாரப் பாடலும் ஈண்டு நினைவு கூரத் தக்கது. (3) புத்தர்கள்: இவர் தன்ஊன் பெருக்கற்குத் தான் பிறிது ஊன் உண்பர். கொல்லாமையை வற்புறுத்தும் இயல்பினர். அது பற்றியே திருவள்ளுவனுரும் 'கொல்லான் புலாலை மறுத்தானைக் கைகூப்பி எல்லா உயிரும் தொழும்' எனக் கொல்லாமையும் புலால் உண்ணு

மையுமாகிய ஈரறங்களுமே பேரறங்களாம் என வற்புறுத்தினர். மிறை- குற்றம். (4) சமணர்: இவர்கள் தலையில் இருக்கும் நுண்ணுயிர் ஊறு படுமோ எனக் கருதி ஒவ்வொரு மயிராகப் பறித்து அவ்வகையில் தலையில் மயிரின்றி வாழ்பவர். 'மழித்தலும் நீட்டலும் வேண்டா' என்னும் திருக்குறளில் பறித்தலும் மழித்தலுள் அடங்கும் எனப் பரிமேலழகர் கூறியிருப்பது இவர்தம் இயல்பைக் குறித்தேயாம். ஆடை அற்றம் மறைத்தற்குரியது. அதனையும் இவர் அகற்றி வாழ் வார் என்பார் 'தாழ்வு நினையாது துகில் தான் அகற்றி' என்றார். ஆழ்விக்கும் அஞ்சு:- உருவம், வேதனை குறிப்பு, பாவனை, விஞ்ஞானம் என்பன. பாழி- சமணர்கள் வாழ்விடம். வைதிகர்: வேதத்தை நன் குணர்ந்தவராயினும் அதன்கண் கூறப்படும் பொருளை மலைவின்றி உணரும் பெற்றியரல்லர். இழிந்தரர்:- இவர் செருக்கொடும் சிவ நிந்தனை செய்பவர்: மெய்யடியார்கள், உறுவது நீற்றின் செல்வம் எனக் கொளும் உள்ளம் உடையவர்கள். பெறுவது சிவன்பால் அன்பாம் பேறு எனக் கருதிவாழும் பெற்றியர். இவ்விரண்டையும் இவர் மனத்தகத்துக் கருதாது பழிக்கவும் செய்வர். ஆதலின் இவர்கள் இழிந்தவர்களானார். ஆதியில்- சிவபரம் பொருளின்மேல், 'ஒளிவளர் பவளமேனி ஒளிநீறணிந்து' எனவரும் திருவாக்கும் காண்க. ஆதியில் என்பதைக் காலம் குறித்ததாகக் கோடலும் ஒன்று. புலையர்- இழிந்தார். மூடர்- இவர் உண்மையறிவு இல்லாதவராதலின் மூடர் எனப்பட்டார். பழித்துத் திரிவார்:- நோயெல்லாம் நோய் செய்தார் மேலது என்பதறியாது இறைவனைப் பழித்துத் திரிபவர் இவர்.

— விழித்து அருளைத்

120 தந்துஎம்மை ஆண்டருளும் சம்பந்த மாமுனிவன்
அந்தம் கடந்துஅப்பா லாய்நின்றோன்— எந்தைபிரான்
வீற்றிருக்கும் ஓலக்கம் எய்திஅடி வீழ்ந்துஇறைஞ்சிப்
போற்றி சயசய போற்றியென— ஆர்த்தகரி
அன்று உரித்தாய் நின்பவனி ஆதரித்தார் எல்லாரும்
வென்றிமதன் அம்புபட வீழ்வரோ— என்றும்
நில்லாத செல்வம் நிலைஎன்று உனைநீங்கிப்
பொல்லா நரகிற் புகுவரோ— பல்லோரும்
கத்துஞ் சமயக் கணக்கிற் படுவரோ
சித்தம் பலகால் திகைப்பரோ— முத்தம்
125 பொருத நகைமடவார் புன்கலவி யின்பம்
மருவி மயங்கி வருவரோ— இருபொழுதும்

நாள்இருபத் தேழும் நவக்கிரக மும்நலியும்
கோள் இதுவென்று எண்ணிக் குறிப்பரோ— வேளை
எரித்த விழியாய்நின் இன்பக் கடற்கே
தரித்து மதிமறந்த தையல்— வருத்தமெலாம்
தீராய் எனஉரைத்துச் செங்கமலப் பூந்திருத்தாள்
தாராய் எனப்பலகால் தாழ்ந்திறைஞ்சி— ஏர்ஆரும்
பூங்கொன்றை வாங்கிப் புகழ்ந்துபுரி நெஞ்சமே
ஈங்கொன்ற வாராய் இனி.

(தெ-ரை) திருநோக்கால் அருளை வழங்கி எம்மை உய்வித் தருளும் சம்பந்தன் என்னும் திருப்பெயருடைய பெருமுனிவனும், இறுதி என்பது ஒன்றின்றி அனைத்துத் தத்துவங்களையும் கடந்து அதற்கு அப்பாலும் நின்றவனும், எமது தந்தையாக விளங்கும் தலைவனும் ஆன குருமூர்த்திகள் எழுந்தருளியிருக்கும் தகவமைந்த இருக்கை இடத்துச் சென்று திருவடிகளை வணங்கி,வாழ்கவென்றும், வெல்கவென்றும் போற்றி செய்து, பேரொலியுடன் வந்த யானையை உரித்து அதன் வலிமையை அடக்கியோனே! நின் தகவமைந்த பெரு வருகை கண்டு வழிபட்டோர் எல்லோரும் மலர்க்கணையால் வெற்றி கொள்ளும் மன்மதனின் அம்புபட அழிவரோ? தான் இருந்தவிடத்தே நிலைபெற்றிராத செல்வத்தை நிலை எனக்கருதி அதன் விளைவாக நின்னை விட்டுப் பிரிந்து தீங்குதரும் நரகில் புகுவரோ? தத்தம் மதங் களை அமைவதாக அரற்றி மலையும் சமயச் சார்புடையாரிடத்துச் செல்வரோ? அதன் விளைவால் தம் சித்தம் கலங்கித் தவிப்பரோ? முத்துக்களை வென்ற சிறுபற்களால் புன்னகை பூத்து நிற்கும் மகளிரொடு கூடி அவ்வின்பவழி மயங்குவரோ? பகலும் இரவும் நாள்மீன் இருபத்தேழும் ஒன்பான் கோள்களும் தம்மை நலிதற்குரிய காலம் என்றெண்ணி அலமருவரோ? மன்மதனை எரித்த விழியை உடையவனே! நின்னைக் கண்டது முதல் நின்னை அணைந்து இன்புறு வதே இன்பம் எனக்கருதித் தன் அறிவு ஒழுக்கங்கள் அனைத்தையும் மறந்த பெண் ஒருத்தியின் வருத்தத்தையெல்லாம் தீர்த்தருள்வாய்! செந்தாமரையனைய அழகிய திருவடிகளையும் வழங்கியருள்வாய்!எனப் பன்முறையும்வேண்டி வணங்கிஎழுச்சி பொருந்திய அழகியகொன்றை மாலையையும் பெற்று அப்பெருமானின் பொருள்சேர் புகழையே என்ஞ் ஞான்றும் விரும்பிச் சொல்லும் நெஞ்சமே! என்னுடன் பொருந்த ஈண்டுவருவாயாக.

இறைவன் தன் பேரருளைத் திருநோக்கால் வழங்கியருளுதல் பற்றி 'விழித்து அருளைத் தந்து' என்றார். காலம் இடம் ஆகிய

இரண்டிற்கும் அப்பாற்பட்டவன் என்பார் அந்தம் கடந்து அப்பாலாய் நின்றேன்' என்றார். அடியவர் சூழ வீற்றிருக்கும் இருக்கை ஓலக்க மாகும். இறைவனைக் கண்ட அளவில் அவன் பேரருளை வாழ்த்துதலும் அவன் அருட்செயல்கள் வெல்க எனக் கூறலும், அதன்பின் வணங் கலும் வேண்டும். திருவாசகத்துள் சிவபுராணத்து 'வாழ்க' 'வெல்க' 'போற்றி' என முத்திறப் படுத்துக் கூறுமாற்றான் இம்முறைமை அறியப்படும். தாருகாவனத்து முனிவர்களின் அவ வேள்வியினின்றும் தோன்றிய யானையாதலின் இறைவனைக் கண்டு ஆர்த்தது. மால்கரி யின் தோலுரித்த மாவீரன் நீ! அத்தகைய நின்னை வழிபட்டார்க்கும் அவ்வீரமும் தகவும் உளவாக வேண்டும். அங்ஙனமாக் கேவலம் மன்மதனின் அம்புபட வீழ்வது அறமோ என்றார். அன்றியும் அம் மன்மதன் நின்னிடத்து வலிதொலைந்து அழிந்தவன் என்பார் இகழ்ச்சிக் குறிப்பாய் 'வென்றி மதன்' என்றார். நில்லாதவற்றை நிலையென்று உணரும் புல்லறி வாண்மை கடையாம். அங்ஙனமாக அத்தகைய செல்வத்தை ஏற்று நின்னில் பிரிவார் அண்ணுத்தல் செய்யாத அளறுக்கே செல்பவராவார். அந்நரகு அவர்க்கு உரித் தாதல் இயல்பு. அத்தகைய நரகு நின் திருத்தக்க பெரு வருகை கண்டார்க்கு உரித்தாகுமோ என்பார் 'பொல்லா நரகில் புகுவரோ' என்றார். முத்தம்-முத்து. இருபொழுது-பகல் இரவு. நாள் இருபத் தேழு-அசுவதி முதலாயின. கோள் ஒன்பது-ஞாயிறு திங்கள் முதலா யின பொழுதும் நாளும் கோளும் ஆகியன பொழுது போக்கிப் புறக் கணிப்பார்க்குத் தீங்கு செய்வன ஆகலாம்; நின்னிடத்து அன்புடை யார்க்கு அத்தகைய தீங்குகள் உளவாமோ என்பார் 'நலியும் கோள் இது என்று எண்ணிக் குறிப்பரோ' என்றார். 'ஞாயிறு திங்கட் செவ்வாய் ......... அடியாரவர்க்கு மிகவே', 'செய்வினை வந்து எம்மைத் தீண்டப்பெறா திருநீலகண்டம்', 'இன்று நன்று நாளை நன்று என்று நின்ற இச்சையால் பொன்றுகின்ற ஆக்கையைப் போக விட்டுப் போதுமின்', 'கோளாய நீக்குமவன் கோளிலி எம்பெருமானே' எனவரும் திருவாக்குகள் காண்க. ஏர்-எழுச்சி. அங்ஙனம் வளர்ந் தமைந்த பருவத்தும் வளர்ந்து மாறியதன்றி இன்னும் வளரும் என்பது போன்று காட்டும் அழகு. குழவித் திங்கள் இமையவர் ஏத்த அழகொடு முடித்தது அருமைத்தாயது போல, இப்பூங்கொன்றையும் அழகொடு முடித்தது அருமையாம் என்பார் 'ஏர் ஆரும்' என்றார். ஈங்கு ஒன்ற-இவ்விடத்து மீண்டும் என்பால் பொருந்த;



வெம்பும் பிறவியலை விழாமல் வீடளித்த
சம்பந்த மாமுனிவன் தார்வாங்கி - அம்புந்தும்
வஞ்சமே வும்விழியார் வல்வினையெல் லாம்அகல
நெஞ்சமே வாராய் நினைந்து

(தெ-ரை) நெஞ்சமே! கொடிய பிறவிக் கடலுள் விழாதவாறு வீட்டின்பத்தை வழங்கியருளிய மறைஞான சம்பந்தன் என்னும் பெருமுனிவனின் மாலையை, அம்பினும் கொடிய விழிகளையுடைய மகளிர் வழி வரும் தீவினைகள் எல்லாம் நீங்குமாறு அவரை வழி பட்டு வாங்கி வருவாயாக.

அம்பு உந்தும் விழியார், வஞ்சம் மேவும் விழியார் எனத் தனித் தனியே கூட்டுக. நெஞ்சமே! மாமுனிவன் தார் வணங்கி நினைந்து வாராய் எனக் கூட்டுக.





## இதமான வாழ்வுக்கு எளிய வழிகள்

### உள்நாக்கு வளர்வதை தடுக்க

(அ) நவாச்சாரம், கற்சுண்ணும்பு இவ்விரண்டையும், எலுமிச்சபழ சாறிலிட்டு அரைத்து நாக்கில் தடவிவர உள்நாக்கு வளர்வதைத் தடுக்கும்.

### கக்குவானுக்கு

(ஆ) மயிலிறகுசாம்பலும், மிளகுசாம்பலும் சமனாய் பொடித்து ஆவின் நெய்யில் மதித்து கொடுக்கக் கக்குவான் நோய் குணமாகும்.

### குழந்தைகளுக்கு ஏற்படும் வயிற்றுபோக்கிற்கு

(இ) ஓமத் தக் கருக்கிப் பொடி செய்து தேனில் கலந்து கொடுக்க வயிற்றுப்போக்கு நிற்கும்.

Dr. N. சடையப்பன். S.M.P.

# திருவிளையாடற் புராணம்

## உரைநடை

விளைவு குன்றியதைக் கண்டும் அவ்வேளாளன் சிறிதும் பொருட்படுத்தாமல் வட்டிக்கும் வட்டி கொடுக்கும் கடன் வாங்கி அடியார்க்கு அன்னம் அளித்தலைச் செவ்வனே நடத்தத் தொடங்கினான்; பின்பு அக்கடனும் கிடைக்காமல், தான் கொண்ட கொள்கையினை நிறைவேற்ற வலியில்லாமல் நின்ற அடியார்க்கு நல்லான் செய்வதொன்றும் அறியாது தன் உடலை உணவின்றியிருத்தலால் வருத்தும் கடப்பாட்டினை மேற்கொண்டான். அடியார்களுக்குக் கொடுக்கின்ற இறைவரே நிலத்தின் விளைவையும், கடன் கோடலையும் மாற்றித் தடுப்பாராயின் அதனைத் தடுக்கவல்லவர் யாவர்? ஒருவருமில்லை. அதனால் அவன் கைக்கொண்ட கொள்கை தடையுற்று நின்றது. சிவனடியார்க்குத் திருவமுது செய்வித்தன்றி உண்ணுதல் செய்யாமையை நியமமாகக் கொண்ட அடியார்க்கு நல்லான் தன்னுயிர்த் துணையாகிய மனைவியோடும் பட்டினி கிடந்து கவலையினால் உள்ளம் புண்ணாக, உடம்பு பசி என்னும் நெருப்பினால் வாட்டப்பட்டான்.

அடியார்க்கு நல்லான் இறைவனிடம் சென்று முறையிடுதல்

அதன் பின்பு, அறத்தின் குன்றுபோல் விளங்கிய அடியார்க்கு நல்லான், ''அழியும் இவ்வுடம்பினால் நமது விரதந் தடைப்பட்டபின் நாம் அடையும் பயன் யாது? என்று கருதி மனைவியோடுஞ் சென்று இச் செய்தியைச் சோமசுந்தரக் கடவுளுக்கு விண்ணப்பஞ் செய்துவிட்டு உயிர் துறத்தலே முடிவு'' என்று துணிந்தான். தன் மனைவியுடன் சோமசுந்தரக் கடவுள் திருமுன்னர்ச் சென்று திருவடியில் வீழ்ந்து வணங்கி நின்று, ''தேவர்கள் உய்யுமாறு நஞ்சினை அமுதாக உண்டருளிய ஒப்பற்றவனே! உமது மெய்யடியார்கள் வழிபாடு தடையுறும் வண்ணம் என்னுடைய நன்செய்யும், புன்செய்யும் விளைவு சுருங்கிக்கெட்டன; கடன் கொடுப்பார் வேறு ஒருவரையும் யான் அறிந்திலேன்; ஆதலின், கடன் கொடுக்க வல்லாரைத் தேவரீர் காட்டியருளவேண்டும்; இன்றேல் அறியாமை பொருந்திய இவ்வுடற் பொறையை இப்பொழுதே மாற்றிவிடுவேன்'' என்று குறையிரந்து வேண்டினான்.

அப்பொழுது [1]பஞ்சாதி என்னும் உறுப்பினையுடைய வேதத்திற்குப் பொருளருளிச்செய்த பெருமானின் திருவாக்கு ஒன்று,

---

1. பஞ்சாதி: பஞ்சாசது என்பதன் மரூஉ. அது சந்தை கூட்டி ஓதுவோர் நிறுத்துதற்பொருட்டு வேதத்தில் வகுக்கப்பட்ட ஐம்பது பதங்கொண்ட ஒரு முடிவு.

''வேளாண்குடித் தலைவனே! நீ அஞ்சாதே! உன் வீட்டில் இன்று செந்நெல்லாகிய வெள்ளிய அரிசிக்கோட்டை ஒன்று சேர்த்துள்ளோம்; அஃது எப்பொழுதும் எடுக்க எடுக்கக் குறையாமலிருக்கும்; நீ அதனை நாடோறும் பூசித்து அதில் வேண்டும் அளவு எடுத்துக்கொண்டு,சிவநேயம் குறையாத அடியார்களுக்கு அமுதளித்துப் பிற தருமங்களையும் செய்யக்கடவை; முடிவில் வீடுபேறு தந்தருளுவோம்'' என்று ஆகாயத்தினின்றும் எழுந்தது

அடியார்க்கு நல்லான் உலவாக்கோட்டை பெறுதல்

அசரீரிவாக்கைக் கேட்டு மகிழ்ச்சியும் அதிசயமும் அடைந்த அடியார்க்கு நல்லான், சோமசுந்தரக்கடவுளைப் பன்முறை பணிந்து மனையை அடைந்தான்; தான் முற்பிறப்புக்களிலே தேடிய தவத்தின் பயனைக் கண்டாற்போல அங்கே என்றும் குறையாத பேரின்பம்போல எடுக்குந்தோறும் குறையாதிருக்கக் கொடுத்தருளிய அரிசிக் கோட்டையைக் கண்டு மகிழ்ந்தான்;இறைவன் அருளிய [1]உலவாக்கோட்டையை நாடோறும் தன் மனைவியுடன் புட்பம், சந்தனம், தூபம், தீபம் என்பவற்றால் பூசைசெய்து அன்னத்தின் பொருட்டும், அதற்கு வேண்டிய கறிப்பொருள் முதலிய பல பொருள் பெறும் பொருட்டும் வேண்டிய அளவு கைக்கொண்டு சிவனடியார்க்கும், அந்தணர்க்கும், தென்புலத்தவர்க்கும், தெய்வங்கட்கும், உறவினர்க்கும், விருந்தினர்க்கும், நட்பினர்க்கும் மேகம்போல வரையாது வழங்கி, எஞ்ஞான்றும் வறுமைநோயின்றிக் குபேரன்போல் வாழ்ந்து வந்தான்.

மின்னார் சடையான் தமர்ஆய்ந்தவர் வேதச் செல்வர்
[2]தென்னாடர் தெய்வம் விருந்(து) ஒக்கல் செறிந்து நட்டோர்
முன்னும் எவர்க்கும் முகில்போல் வரையாமல் நல்கி
எந்நாளும் நோயின்(று) அளகாதிபன் என்ன வாழ்ந்தான்.

இவ்வாறு அடியார்க்கு நல்லான், பன்னெடுங்காலம் அறம் செய்து வாழ்ந்த பின்னர் தன் மனைவியோடும்,சுற்றத்தாரோடும் சிவசாரூப்பியம்பெற்றுச் சிவபுரத்தை அடைந்தான்.

செய்யுள்—18
ஆகச் செய்யுள்—1925

---

1. உலவாக்கோட்டை-இஃது, எடுக்க எடுக்கக் குறையாத அரிசிக் கோட்டை ஆகும்.

2. இங்கு, '' தென்புலத்தார் தெய்வம் விருந்தொக்கல் தானென்றாங்(கு), ஐம்புலத்தா(று) ஓம்பல் தலை ''என்ற திருக்குறளின் கருத்து அமைந்திருத்தலை அறிக.

# 39. மாமனாக வந்து வழக்குரைத்த படலம்

### தனபதி-சுசீலை

எக்காலத்தும் அழியாத நான்மாடக்கூடல் என்னும் மதுரைப் பதியில் வணிகர் குலத்திலே தனபதி என்னும்பெயர் கொண்ட ஒருவன் வாழ்ந்து வந்தான். அவன் குபேரனை ஒத்த பெருஞ் செல்வமுடையவன் ஆவன். அவனுக்குத் திருமகளைப் போன்ற அழகுடையவளும் கற்பிற் சிறந்தவளுமாகிய சுசீலை என்பவள் மனைவியாவள். அவ்விருவரும் நெடுங்காலம் மகப்பேறின்றி வருத்தமுறும் பொழுது, தனபதி மருமகனையே (தங்கையின் மகனையே) தகுதி அமைந்த மகனாக ஏற்றுக் கொண்டு மனமகிழ்ந்து சிறப்போடு மனையாள் கைக்கொடுக்க அவள் தொழுது வாங்கி, அச் சிறுவனுக்கு அணிகலன்கள் பல அணிவித்துப் பேணிப் பொலிவுற அன்போடு வளர்த்துவந்தாள்.

### தனபதி தங்கையிடம் பூசல் கொண்டு தவத்திற்குச் செல்லல்

தனபதி, தன் தங்கை வருந்திப் பெற்ற பிள்ளையைத் தனக்குத் தந்த நன்றியைச் சிறிதும் பாராட்டாமல் தன் மனைவிமேல் வைத்த ஆசை மயக்கத்தினாலே அத் தங்கையோடு நித்தமும் தீராச் சண்டையிட்டுக்கொண்டு வந்தான். ஒரு நாள் தங்கை சினந்து, ''உனக்குப் பெருமிதம் (செருக்கு) ஏன்? நீ பிள்ளைப்பேறு அற்ற பாவி! நீ என் அருமைப் பிள்ளையினால் அன்றோ இம்மை மறுமைப் பயன்களையும் அடைவாய்?'' என்றாள். தனபதி அம் மொழிகளைக் கேட்டுப் பெரிதும் நாணி ''மறுபிறப்பிலாயினும் மகப்பேற்றினைத் தருதற்குரிய தவத்தினைச் செய்யவேண்டும்'' என்று முடிவு செய்து அளவிடற்கரிய தன் செல்வமெல்லாவற்றையும் மருமகனுக்கே உரிமை ஆக்கிவிட்டு அன்பு மிகுந்த தன் மனைவியோடும் அரிய [1]தவநெறியிற் சென்றான்.

### தாயத்தார் தனபதி மருகன் பொருளைக் கவர்தல்

பின்பு, தவ நெறியிற் சென்ற அத் தனபதியின் வருகை காலந் தாழ்ந்தமையால் அவனது மருமகன் அடைந்த செல்வம் அனைத்தையும் தாயத்தார்கள் வல் வழக்குறப் பேசிக் கவர்ந்து கொண்டனர்;

---

1. தவநெறி – இங்கு வானப்பிரத்த நிலை;

### தனபதியின் தங்கை மதுரை நாயகன் திருமுன் முறையிடுதல்

விளை நிலங்கள், அடிமைகள், அணிகலன்கள், பொருள்கள், பசுக்கள், பிற வளங்கள் முதலானவற்றைத் தாயத்தார்கள் கைப்பற்றிக் கொள்ள, வலிய சிறைகளை இழந்த பறவைபோல, புதல்வனும் அவனைப் பெற்ற தாயும் தளர்வடைந்து, ''சார்பில்லாதவர்கள் எல்லாருக்கும் ஒரு பற்றுக்கோடாயிருப்பவர் சோமசுந்தரக் கடவுளே ஆவர்; அவரே நமக்குப் புகலிடம்'' என்று கருதி, விண்ணிழி விமானக் கோயிலில் எழுந்தருளியிருக்கும் சோமசுந்தரக் கடவுளின் திருமுன் சென்று வணங்கிநின்று, ''யாவர்க்குந் தந்தையும் தாயும் ஆகிய தம்பிரானே! தேவரீரே அடியேங்கட்கும் தாயும் தந்தையும் ஆவீர்; அடியேனுடைய தமையன், தனக்கு மகப்பேறின்மையால் என் மகனை யாவரும் அறிய முறைப்படி தனக்குச் சுவீகார புதல்வனாகக் கொண்டு அப்பொழுதே விளை நிலம், செல்வம், மனை, பிறபொருள் யாவற்றையும் இவனுக்கே கொடுத்துவிட்டுத் தவத்திற்குப் போயினான். பின்பு, என் தமையனின் தாயத்தார்கள் அப்பொருள்களனைத்தையும் தங்கள் வன்மையால் கவர்ந்து கொண்டார்கள்; ஐயனே! நானோ யாருமற்ற ஒருத்தி; ஒருத்தியாகிய எனக்கு இவன் ஒரே புதல்வன்; இவனும் நன்மை தீமைகளை ஆராயுங் கருத்து இல்லாத சிறுவன்; அடியேங்களுக்கு ஒரு பற்றுக்கோடும் இல்லை. அறவோர் தேரும் அருட் பெருங் கடல்! எங்கும் நிறைந்திருக்கும் நீர் இவற்றை அறியீரோ?'' என்று விண்ணப்பஞ் செய்து நிலத்தின்மீது வீழ்ந்து அழுதாள்.

ஒருத்திநான் ஒருத்திக் கிந்த ஒருமகன் இவனுந் தேருங்
கருத்திலாச் சிறியன் வேறு களைகணுங் காணேன் ஐய!
அருத்திசால் அறவோர் தேரும் அருட்பெருங் கடலே! எங்கும்
இருத்திநீ அறியாய் கொல்லோ என்றுபார் படிய வீழ்ந்தாள்

அச்சமயம் மாறுகொண்ட வழக்கினைத் தீர்க்க வல்ல மதுரேசர் திருவருளினாலே சோர்ந்து வீழ்ந்த தனபதியின் தங்கை சிறிது உறக்கங் கொண்டனள்.

### இறைவர் தனபதி தங்கையின் கனவில் தோன்றியருளல்

அப்போது சோமசுந்தரக் கடவுள் அவளுக்குச் சூக்கும உடம்பினின்று அறியும் சொப்பனத்திலே ஒரு அந்தணராய் எழுந்தருளி வந்து, ''கேளாய் பெண்ணே! பொழுது விடிந்து பின்னர் தாயத்தார்களை நீ

அரசன் ஆணையினாலே தடுத்துத் தரும சபையின்கண் ஏற்றியிருப்பா யாக; யாம் வந்து அறிவில் சிறந்த பெரியோர்கள் அனைவரும் ஒப்பும் வண்ணம் அந்தப் பொய்வழக்கினைத் தீர்த்து உன் பொருள்களை மீட்டுத் தருவோம்; நீ செல்க'' என்றருளிச் செய்தார்- உடனே வணிகமாது விழித்தெழுந்து அதிசயித்து, ''நான் ஏதேதோ எண்ணிக்கெட்டேன்! யாரும் இல்லாதவருக்குத் தெய்வந் துணை என்னும் பழமொழியை அறிந் தேன்'' என்று கூறி அங்கயற்கண் அம்மையின் தலைவராகிய சோம சுந்தரக் கடவுளை வணங்கித் துதித்துக்கொண்டு மகனோடு தன் இல்லின் கண் சென்றாள்; இனிதே துயின்றாள்.

வணிகமாது தாயத்தார்களை நியாயசபைக்கு அழைத்தல்

மறுநாள் விடியற்காலையில், வணிகமாது எழுந்து வெள்ளியம் பல வாணரது திருக்கோயில் வாயிலையடைந்து வணங்கிக் கொண்டு, இறையவன் கூறியருளியவாறே கொடியவழக்கினைத் தொடுத்து வென்ற தாயத்தார்களின் இருப்பிடத்தை அடைந்து பலருங்கேட்க, அவர்களை நோக்கி, ''அடுப்பில் நெருப்பிடாதீர்கள்!ஓர்அடியும் எடுத்து வையாதீர்கள்!அறநெறியால்?அல்லாமல் பொய்வழக்கினால் வென்று போக விடேன்; அனைவரும் சான்றாக [1]அரசன்மீது ஆணையிட்டேன்; தரும சபைக்கு வந்து பெரியோர்கள் ஆய்ந்து கூறும் தீர்ப்பினைக்கேட்டு எங் கள் உரிமைப் பொருளைக் கொடுத்துவிட்டுச் செல்லுங்கள்'' என்று சொல்லி மறித்தாள்.

அட்டில்வாய் நெருப்பி டேல்! ஓர்
அடியிடேல்! அறத்தா(று)அன்றிப்
பட்டிமை வழக்கால் வென்று
போகொட்டேன்; பலருங் கேட்க
இட்டனன் அரசன் ஆணை;
அறத்தவி(சு) ஏறி ஆன்றோர்
ஒட்டிய படிகேட்(டு)எங்கள்
உரிப்பொருள் தந்து போமின்.

அப்பொழுது மிக்க வலியுடைய தாயத்தார்கள் அவளைத் திய சொற்கள் கூறி வைது நிலத்தில் தள்ளி அடித்தார்கள். அவள், தன் புதல்வனுடனே, ''இது முறையோ! இது முறையோ!'' என்று கூவிக் கொண்டு தரும சபையை அடைந்து சபையார்க்குத் தன் வழக்கைக்

---

1. அரசன்மீது ஆணை கூறியழைப்பின் மீறிச் செல்லார் என்பது பண்டைய மரபு.

கூறினள்: அதுகேட்ட நீதிநூல் வல்ல சபையார் ஏவலர்களை விடுத்தனர்; தனபதி தங்கை அவர்களோடு சென்று தாயத்தார்களை மறித்து நியாய சபையின்கண் கூட்டி வந்தாள். அந்நிலையில் சோமசுந்தரக் கடவுள் தாம் தவமேற்சென்ற தனபதியே போலத் திருவுருவந்தாங்கி அங்கு எழுந்தருளி வரலானர்.

சோமசுந்தரக்கடவுள் மாமனாக எழுந்தருளி வருதல்

அங்குத் தனபதியே போல உருக்கொண்டு வந்தருளிய சிவபெருமானின் திருச்செவிகளில் அணிந்த இரத்தின குண்டலங்கள் பிடரியில் ஒளி வீசவும், திருத்தோள்களில் வாகுவலயங்கள் ஒளிவீசவும் திருமார்பில் மணிக் கண்டிகை விளங்கவும், வண்டுகள் மொய்த்துக்கிடக்கும் செந்தாமரைமலர்போல நீலமணியால் செய்தமோதிரங்களை அணிந்த திருக்கரத்தை வீசிக்கொண்டு கோபநோக்கினையுடைய சிங்கம்போலப் பெருமிதத்தோடு நடந்துவந்தார். அப்பொழுது, அவரது முகம் தாயத்தாரை நோக்கும் போதெல்லாம் வாடிய தாமரை போல் விளங்கும்; மைந்தனை நோக்கும் போதெல்லாம் அன்றலர்ந்த தாமரை போல் விளங்கும். இத்தகைய தோற்றத்தோடு இறைவர் நியாய மன்றினை அணுகும்போதே, ''இங்கு அரசன் இல்லையோ! ஆன்றோர்கள் இல்லையோ! அரசனுடைய செங்கோல் கொடுங்கோலாயிற்றோ! வேத சிவாகமங்களை அருளிய கடவுளும் இல்லையோ! தருமமும் எங்கே சென்று ஒளித்ததோ!'' என்று சொல்லி முறையிட்டுக் கொண்டு தரும சபையினை அடைந்தார்.

அரசனிங்(கு) இல்லை கொல்லோ!
    ஆன்றவர் இல்லை கொல்லோ!
குரைகழல் வேந்தன் செங்கோல்
    கொடியதோ! கோதில் நூல்கள்
உரைசெயுந் தெய்வந் தானும்
    இல்லைகொல் உறுதி யான
தருமமெங்(கு) ஒளித்த தேகொல்
    என்(று)அறத் தவிசிற் சார்வார்.

அப்பொழுது தனபதியின் வருகையைக் கண்டு தாயத்தார்கள் மனந்தளர்ந்து பெருவியப்பு அடைந்து, ''வெல்வோம்'' என்று கொண்ட மனவலியை இழந்து, முன்பு பொய்வழக்கால் வென்ற தீச்செயலை நினைந்து நினைந்து அச்சமும் நாணமுங் கொண்டு நின்றார்கள். மாமனாகி வந்த சிவபெருமான், தன் மருமகனையும் தங்கையையும், தழுவிக்கொண்டு தம் திருமிடற்றினின்றும் நீங்காத சாம வேதத்தினைப் பாடுபவர்போல் வாய்திறந்து, ''ஐயகோ!'' நீங்கள் வறியவர்களானீர்களே!'' என்று புலம்பினர்.

மாதுல ராகி வந்தோர் மருகனைத் தம்பின் வந்த
தாதுல ராத கோதை[1] தன்னெடுந் தழீஇத்தங் கண்ட
மீதுல ராத சாம வேதம்ஆர்ப் பவர்போல் வாய்விட்(டு)
ஆதுல ரானீர் அந்தோ! ஐய!என்(று) அழுது நைந்தார்.

அப்போது வணிகமாதும் அவள் மகனும் வணிகராக வந்த இறைவனின் திருவடிகளில் வீழ்ந்து வணங்கிக் கண்ணீர்விட்டு அழுதனர்.

வணிகமூர்த்தி மகனையும் தங்கையையும் தழுவித் தேற்றுதல்

வணிகமூர்த்தி அவர்களைத் திருக்கரங்களால் எடுத்துத் தழுவித் தமது கண்ணீராகிய கடல் வெள்ளத்தில் மூழ்குவித்துப் பின்பு புதல்வனைப் பார்த்து, "உன் மார்பிலே [2]ஐம்படை என்னும் அணியைக் காணேன்; காலிலே சிறிய சிலம்பினைக் காணேன்; தோளிலே தோளணியைக்கணேன்; முகத்திலே அசையும் சுட்டியைக் காணேன்; காதுகளிலே ஒளி வீசும் குண்டலங்களைக்காணேன்; இப்போதுஅணிகள் நீங்கிய வெற்றுடம்பை மட்டுங் கண்டேன்; அப்பா! எத்துணை விலை பெறுமென்று கருதிப் பிள்ளைப்பணிகளையும் கவர்ந்துகொண்டனர்?''.

ஐம்படை மார்பிற் காணேன்; சிறுசிலம் படியிற் காணேன்;
மொய்ம்படை மதாணி காணேன்; முகத்தசை சுட்டி காணேன்;
மின்படு குழைகள் காணேன்; வெற்றுடல் கண்டேன்; அப்பா!
என்பெறு மென்று பிள்ளைப் பணிகளுங் கவர்ந்தார் (என்னு);

என்று சொல்லி அனைவரும் மனமிரங்கும்படி வாய்விட்டு அழுதார்; தங்கையையும் புதல்வனையும் கண்ணீர் மாற்றிக் கையினால் முதுகைத்

---

1. தாதுலராத கோதை – (தாயத்தார்கள் பூமியில் தள்ளிப் புரட்டி அடித்ததனால்) மண் நீங்காத கூந்தலையுடைய வணிகமாது; (தாது-மண்.)

2. ஐம்படை - பஞ்சாயுதம் என்னும் ஓர் ஆபரணம்; காவற் கடவுளாகிய திருமாலின் சங்கு, சக்கரம், வில், வாள், கதை என்னும் ஐம்படை வடிவாகச் செய்யப்பெற்றதோர் அணி. இது குழந்தைகட்குக் காவலாக ஐந்தாம் மாதத்தில் தரிப்பது மரபு என்பர். இந்த அணி ஐம்படைத்தாலி எனவும் பெயர் பெறும்;

தடவி "வருந்தாதீர்கள்! என் முன்னே [1]வேறு ஒன்றினையும் நினையாதீர்கள்! 'நான் வருவேன்!' என்று சிறிதும் நினையாத வஞ்சகத் தாயத்தார்களின் வழக்குத் தோற்றுவிடும்! பாருங்கள்!" என்றார். பின்னும் அவர்களை நோக்கி, "நண்பர்களிடத்து வஞ்சனை புரிந்தும், நம்பி வைத்தவர் பொருளைக் கவர்ந்தும், இரப்பவர்களுக்கு இம்மியளவுங் கொடாது உலோபஞ் செய்தும், வரம்பின்றி வட்டி வாங்கியும் சிலர் தேடுதல்போலத் தேடப்பட்டதோ? அன்று; அறவழியில் தேடப்பட்ட நமது பொருள் அழியுமா?" என்றார்.

நட்பிடை வஞ்சஞ் செய்தும் நம்பினோர்க்(கு) ஊன்மா றுட்டத்து
உட்படக் கவர்ந்தும் ஏற்றோர்க்(கு) இம்மியும் உதவா ராயும்
வட்டியின் மிதப்பக் கூறி வாங்கியுஞ் சிலர்போல் ஈட்டப்
பட்டதோ? அறத்தா(று) ஈட்டும் நம்பொருள் படுமோ? என்ன.

பிறகு மதுரைக்கு நாயகனாகிய சோமசுந்தரக் கடவுள் எழுந்தருளியிருக்கும் திக்கை நோக்கித் தம் திருக்கரங்களைத் திருமுடிமேற் குவித்து, "மாணிக்கம் விற்றருளிய வணிகர் குலத் தலைவரே! எங்கள் வழக்கை இந்த அற மன்றத்தவர் வாயிலாகத் தீர்த்து எமது பொருளைத் தருக" என்று புலம்பி முறையிட்டார்.

இவ்வாறு வாய் புடைத்து ஆர்த்து அழுத வணிகமூர்த்தி வஞ்சகர்களாகிய தாயத்தாரை வெகுண்டு நோக்கினர்; பின்பு நீதி மன்றத்தாரை நோக்கி, "அரசனது செங்கோலாகிய நூலினால் கட்டிய அறமாகிய தட்டிலே உங்கள் நாவாகிய துலாக்கோலையிட்டு எமது வழக்கையும் தாயத்தார்களின் வழக்கையும் சீர் தூக்கி நியாயம் வழங்குங்கள்[2]" என்று தெளிவுபடக் கூறியருளினர்.

---

1. வேறு ஒன்றினையும் நினையாதீர்கள் என்பதற்கு இத்துணை நாள் விட்டுவிட்டு மறந்திருந்தேன் என்றும் நினையாதீர்கள் என்றேனும், இவ்வழக்குத் தோற்றுவிடுமோ என்றும் நினையாதீர்கள் என்றேனும் பொருள் கொள்க:

2. இங்கே, "சமன்செய்து சீர்தூக்குங் கோல்போல் அமைந்தொருபால், கோடாமை சான்றோர்க்(கு) அணி" என வரும் திருக்குறள் சிந்திக்கற்பாலது.